பண்டிதர் வே. மகாலிங்கசிவம் அவர்கள் ஞாபகார்த்தப் பதிப்பு

உ

சிவமயம்

கணபதிதுணை

# தேவி மானச பூசை அந்தாதி

யாழ்ப்பாணம்

முகாந்திரம் தி. சதாசிவ ஐயர்

இயற்றியது.

சுன்னாகம் :

திருமகள் அழுத்தகம்

1950



[விலை பிரதி: 75 சதம்.

# உரிமையுரை

புண்ணியன்று வினைநாளும் பூசைபுரி வேற்பிள்ளை
பண்ணியமா தவத்துவரு பாலன்தமிழ்ப் பெரும்புலவன்
திண்ணியன்மா விட்டபுரச் சேர்வினன்றீ தகலுளத்தன்
மண்ணியமா மணியனைய மகாலிங்க சிவநாமன்.

திரிபுரசுந் தரிதேவி செகமுழுதும் புரக்குமன்னை
பரிபுரச்சீ றடிநாளும் பரவுமுயர் பத்திமையான்
திரிபுரவா நண்பனவன் செய்யநினை வுக்குரிமை
பரிவுடனுக் கினன்பரைதன் பாடல்கெழு மிப்பனுவல்.

தி. ச.



பண்டிதர்
வே. மகாலிங்கசிவம்
1891—1941.

# முகவுரை

பூரணி, புராதனி, சுமங்கலை, சுதந்தரி,
புராந்தகி, த்ரியம்பகி, யெழிற்
புங்கவி, விளங்குசிவ சங்கரி, சகஸ்ரதள
புட்பமிசை வீற்றி ருக்கும்
நாரணி, மனாதீத நாயகி, குணாதீத
நாதாந்த சத்தி, என்றுன்
நாமமே யுச்சரித் திடுமடியர் நாமமே
நானுச் சரிக்க வசமோ?
ஆரணி சடைக்கடவு ளாரணி யெனப்புகழ
அகிலாண்ட கோடி யீன்ற
அன்னையே! பின்னையுங் கன்னியென மறைபேசும்
ஆனந்த ரூப மயிலே!
வாரணியு மிருகொங்கை மாதர்மகிழ் கங்கைபுகழ்
வளமருவு தேவை அரசே!
வரைராச னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்காத லிப்பெண்! உமையே!

—(தாயுமானவர்)

உலகத்தில் எவரொருவரும் எந்தக் காரியத்தைச் செய்ய விரும்பினாலும் அது செய்தற்காகிய சத்தியுடையரான வழியே அதனைச் செய்ய மாட்டுவர்; சத்தியில்லாத வழிச் செய்யமாட்டார். இதனை நாம் அனுபவத்திற் காண்கின்றோம். உலகத்துள்ள மக்கள் ஒவ்வொருவரும் தம் வாழ்க்கையி லுயர்ச்சி பெறுவதற்குச் சாதகமாகிய சத்தியைப் பெறுவதற்குப் பலவகையாலும் முயலுகின்றனர். தெய்வ சகாயத்தை நாடி நல்வழியில் முயன்று பலனடைந்து பிரசித்திபெற்றவர் சிலரும், தம் மனம்போன போக்கிற் சென்று தீயவழியிலுழன்று அவலமானவர் பலரும் ஆவர். பற்பல பெரிய தேச வல்லரசுகளும் இக்காலத்திற் புதிது புதிதாகப் பௌதிக சத்திகளைத் தேடியடைந்து அவைமூலம் ஏனைய தேசங்களைத் தம் அடிப்படுத்தவும் முயல்கின்றன.

அகில உலகமும் சத்தி (Energy) மயம் என மேலைத் தேச விஞ்ஞான சாத்திரிகளும் இப்போது கூறுகின்றனர். "சர்வம் சக்திமயம் செகத்" என்னும் உண்மையைப் பரதகண்ட வாசிகளாகிய நாம் மிகப் பழைய காலந் தொடங்கியே அறிந்துள்ளோம். "வெற்றிச் செல்வத்துக்குக் காரணம் சத்தியே (ஆற்றலே). சத்திவாய்ந்தவர்கள் ஆணுகப் பெண்ணுக எவர்க்கும் அஞ்சார். உலகத்தில் இயற்கையாக எங்கும் சத்தியே மேம்பட்டு விளங்குகின்றது" என்பது பிரமாண்ட புராண வசனம்.

உலகமானது ஈச்வர சத்தியால் தோன்றி நின்று நடைபெறுவது என வேதாகம சாத்திரங்கள் உபதேசிக்கின்றன அன்றோ!

"ய: ஸர்வான் லோகான் ஈசதே ஈசனீபி: ஜநநீபி: பரம சக்திபி:,"

என வேதமும்,

"கரோதி ஸம்ஸ்ருதிம் பும்ஸாம் ஆஜ்ஞயா சமவேதயா",

எனவும்,

"அத பத்யு: அதிஷ்டானம் ஸ்வசக்தி: கிரணத்மிகா",

எனவும்,

"ஸைஷா சிவாச்ரயா சக்தி: அமோகா பலசாலிநீ",

எனவும் ஆகமங்களும் போதிக்குமாற்ருல் சிவசத்தியே உலகத்தை நடத்துவது என்பது நன்கு அறியப்படும். மேலும் இதனை,

"ஈசனருள் இச்சைஅறி வியற்றல் இன்பம்
இலயமோடு போகஅதி கார மாகித்
தேசருவம் அருவுருவம் உருவ மாகித்
தேவியுமாய்த் தேசமோடு செல்வ மாகிப்
பேசரிய உயிரையெலாம் பெற்று நோக்கிப்
பெரும்போக மவையளித்துப் பிறப்பினையு மொழித்திட்
டாசகலும் அடியருளத் தப்பனுட னிருக்கும்
அன்னையருட் பாதமலர் சென்னி வைப்பாம்."

எனவரும் சிவஞான சித்திச் செய்யுளும் விளக்கமுறக் கூறியிருத்தல் காண்க. (இங்கு, ஈசனருள் என்றது ஈச்வரனின் வேருகாத அவ்னது அருளாகிய பராசத்தியை யென்றறிக). இங்ஙனம் பிரபஞ்சத்தைத் தோற்றுவித்து நடாத்துகின்ற பராசத்தி பரசிவத்தின் வேருனதன்று; சத்தியும் சிவமும் ஒன்றே, விளக்கும் ஒளியும் போல. இது,

"அருளது சத்தி யாகும் அரன்தனக்கு அருளை யின்றித்
தெருள்சிவம் இல்லை, அந்தச் சிவமின்றிச் சத்தி இல்லை."

எனவும்,

"எத்திறம் நின்ற னீசன் அத்திறம் அவளும் நிற்பள்"

எனவும்

சிவஞானசித்தியாரிற் கூறியிருப்பது நோக்கி நன்கு துணியப்படும். இவ்வாறு சிவத்துக்கும் சத்திக்கும் பேதமின்மையால்தான் தாயுமான சுவாமிகளும் பூரணி, புராதனி, புராந்தகி என முதல்வன் திருநாமங்களை முதல்விக்கும் உரியனவாக வழங்கித் துதிசெய்வாராயினர் என்றறிக.

பெறுதற்கரிய இம் மானுடப் பிறவியைப் பெற்றும், அதனருமையை முற்றும் மறந்து நம்மவருட் பலர் இவ்வுலக வாழ்க்கையில் தாம் சிறந்த நிலைபெற்று ஓங்கவேண்டும் என்னும் அவாவினுலே தம் முயற்சி யாவும் அதன்பொருட்டே செய்து ஒழிவர். அதற்காகக் கல்வி செல்வம் அதிகாரம் முதலிய சத்திகள் பலவற்றையுந் தேடியலைவர். தம் ஆன்ம ஈடேற்றங் குறித்துச் சிந்திப்பதற்கும் அவகாசம் பெறுகின்றிலர். இவர் செயல் இங்ஙனமாக: நமது சமய நூல்கள் யாது கூறுகின்றன என நோக்குவோம். உலகத்துக் காணப்படும் எல்லா வகையான சத்திகளுக்கும் மூலமாயும் உலக அன்னையாயுமுள்ள பராசத்தியை (Supreme Divine Energy) வழிபடுபவர் இவ்வுலக வாழ்க்கையில் உயர்ச்சி பெறுவதற்காகிய இச்சாசத்தி (Energy of initiative urge), ஞான சத்தி (Energy of wisdom), கிரியா சத்தி (Energy of action) என்பவற்றையும் பிறவிப் பெரும் பயனையும் ஒருங்கு எய்துவர் என நமது சமய சாத்திரங்கள் முழங்கிக் கூறுவது காணலாம்.

"எவன் அன்னம் உண்கிறுன், அவன் என்னுல் உண்கிறுன்; எவன் பார்க்கிறுன், அவன் என்னுல் பார்க்கிறுன்; எவன் கேட்கிறுன், அவன் என்னுற் கேட்கிறுன். இவ்விதம் சர்வ அந்தரியாமி (பரமாத்ம சக்தி)யாக இருக்கும் என்னை எவன் அறிந்திலனே அவன் ஸம்ஸார பந்தத்தால் தேய்வடைகிறுன். நண்பனே! கேள். சிரத்தையோடு முயன்று பெறவேண்டிய இதனை நானே யுபதேசிக்கின்றேன். இது தேவர்களுக்கும் நல்லது, மனிதருக்கும் நன்மையானது; அதனைச் சொல்கின்றேன்: எவன் என் கருணைக்குப் பாத்திரமாகின்றுனே அவனை எல்லாரினும் மேம்படச் செய்வேன்; அவனைச் சிருட்டி கர்த்தா ஆக்குவேன்; அவனைத் தத்துவ தரிசி யாக்குவேன்; அவனை மகாமேதை யாக்குவேன்."

இது ஈச்வர சத்தியைப்பற்றிய துதியாக இருக்கு வேதத்தில் வருமவற்றுள் இரண்டு மந்திரங்களாகும் (இருக். 10 - 125 - 4, 5,).

"சிவம் எப்படியோ அப்படியே தேவியும், தேவி யெப்படியோ அப்படியே சிவமும் இருப்பர். சிவத்துக்கும் சக்திக்கும் பேத மில்லை, சந்திரனுக்கும் சந்திரிகைக்கும் பேதம் இல்லாதது போல. அப்படியே சத்தியும் சிவமுமின்றி இந்தச் சராசரப் பிரபஞ்சமு மில்லை. தடையிலா ஞானமாகிய அந்தப் பராசக்தி உலகத்தைத் தோற்றுவிப்பதாகிப் பல்வேறு சக்திகளாகப் பிரிந்து நின்று ஈச்வர சங்கற்பத்தின்படி உலகத்தை நிலைபெறுத்துகின்றது. சக்தி சிவங்களின் காரியமாய், சக்தி சிவங்களால் வியாபிக்கப் பட்ட இவ்வுலகத்தில் சத்தியோடு சேரச் சிவத்தைத் தம் மனத்தி லிருத்தி வழிபடு மவர்க்கே நிலையான போக மோட்சங்கள் கிட்டும், ஏனையோர்க்கு இல்லை, என்பது சுருதி." இது ஸ்ரீ சிவபுராண வசனம்.

"இவ்வுலக மெங்குமுள்ள சடப்பொருள் சித்துப்பொருள் ஒவ்வொன்றிலும் என்ன என்ன சக்தி யுண்டோ அவையெல்லாம் தேவி! நீயே என்றுணர்ந்து உன்னைத் துதிக்கின்றேன்." இது மார்க்கண்டேய புராணம் கூறுவது (அத். 81, 63 செய்.).

இவ்வாறு சாத்திரங்கள் கூறும் போதனை ஒருபாலாக, மற் றொருபால் உலக நடையும் இதனையே வலியுறுத்துதலைக் காண் கின்றேம். எங்ஙனமெனில்: தாயினுடைய தயவிருந்தால் தந்தையிட மிருந்து தாம் விரும்பிய தொன்றைப் பெறுவது தனயருக்கு எளிதா மன்றோ. தந்தையிடத்தில் மக்கள் அச்சம் அடக்கம் மரியாதை யென்பன கலந்த அன்பு காட்டுதல் வழக்கம். தாயிடத்திலோ ஒளிப்பு மறைப்பில்லாத கலப்பற்ற அன்பும் நம்பிக்கையும் வைத்து நடக்கின்றார்கள். இது குடும்ப வாழ்க்கையின் இயல்பு. இதனா லும், ஈச்வரனை அவனின் வேறாகாத சத்தியாக—அன்னையாக— வழிபடுதலில் ஒரு தனியன்பும் மன உருக்கமும் உதிப்பது இயற்கை யாகிறது. ஆகவே, பராசத்தியாகிய தேவியை வழிபடுதல் அவசியம் என்பது நன்கு தெளிவாகின்றது. அம்பிகையை உபாசித் தற்கு எல்லாரும் அதிகாரிகளே; ஆண் பெண், உயர்ந்தசாதி தாழ்ந்தசாதி என்கிற பேதமின்றி எவரும் பூசித்து வழிபடலாம்.

அங்ஙனம் அம்பாளை வழிபடுதல் இரண்டு விதமாகச் செய்ய லாம். ஒன்று ஓர் உருவத்தில் அம்பாளைத் தாபித்துப் பூசித்த லாகிய புறப்பூசை. மற்றது தேவியின் திருவடிவை மனத்தில் இருத்தித் தியானித்துத் தோத்திரம் செய்தலாகிய அகப்பூசை.

அகப்பூசை யெனினும் மானச பூசை யெனினும் ஒக்கும். முந்திய புறப்பூசையிலும் பின்சொல்லிய மானச பூசையே சிறந்தது என்பர் பெரியோர். தேவியின் மந்திரமாகிய பதினைந்து எழுத்தைச் செபித்தலும், நாற்பத்து முக்கோண ஸ்ரீ சக்கிரத்தில் தேவியைப் பூசித்துத் தியானித்தலும், தேவியின் ஆயிரம் நாமங்களை ஓதுத லும் என்னும் மூன்றும் தேவி வழிபாட்டின் அங்கங்களாகும்.* இவ்வித மானச பூசை செய்தற்குச் சாதனமாக அமைந்தது "தேவி மானச பூசை அந்தாதி" என்னும் இத் தோத்திரப் பாமாலை. தேவிக்கு அறுபத்துநாலு வகையான உபசாரங்கள் வழங் கிப் பூசை செய்வதாக இத்தோத்திரம் அமைந்துள்ளது.

நமது அன்புக்கு உரியார் ஒருவரை வரவேற்று உபசரிக்கும் போது நாம் அவர்க்குச் செய்யும் மரியாதைகளைப் போலவே, தெய்வத்தை அன்போடு பூசிக்கும்போது அன்புக் கொடையாகச் சமர்ப்பிக்கப்படும் பொருட்களுக்கும் செயல்களுக்கும் உபசாரம் என்று பெயர். பூசை செய்யும்போது வழங்கப்படும் முக்கியமான உபசாரங்கள் ஐந்து. அவை கந்தம் (சந்தனம்), புஷ்பம், தூபம், தீபம், நைவேத்தியம் என்பனவாம். இவ்வைந்தும் பஞ்சோபசாரம் எனப்படும். இந்த ஐந்தும் அவசியம் செய்யவேண்டியன; செய் யாதுவிடின் பூசை செய்வதாற் பயனே கிடையாது. ஏனெனில்; இவை நமது உடம்பிலுள்ள பஞ்சபூதங்களின் ரூபமான பொருட்க ளாகும்; அதாவது, கந்தம் (பிருதுவி), புஷ்பம் (ஆகாயம்), தூபம் (வாயு), தீபம் (தேயு), நைவேத்தியம் (அப்பு: அமிர்தம்) ஆகிய பஞ்சோபசாரங்களும் பஞ்சபூதமயமாகிய எமது உடலைக் குறிக்கும் பிரதிநிதிகளாக ஸமர்ப்பிக்கப்படுவன; அதனுல் ஆன்ம தத்துவ சுத்தியுண்டாகிறது; அதனுல் அவை அவசியமாகின்றன வென்றறிக.

இனி, இப்பஞ்சோபசாரங்களையும் ஆதாரமாக வைத்து மேலும் சிலவற்றைச் சேர்த்துப் பதினுறு உபசாரங்களோடு †

---

* "எவன் ஸ்ரீ வித்தை (தேவியின் 15 எழுத்து) மந்திரத்தை அறிந்திருக் கிருனே, எவன் ஸ்ரீ சக்ரத்தை நன்ருக அருச்சிக்கிருனே, எவன் இந்த ஆயிரம் நாமத்தைக் கீர்த்தனஞ் செய்கிருனே அவனைத்தான் நல்ல பாத்ரமானவனென்று அறிஞர்கள் சொல்லுவார்கள்" என்பது பிரம மாண்ட புராண வசனம்.

† 16 உபசாரங்களாவன:— 1. ஆசனம், 2. பாத்யம், 3. அர்க்கியம், 4. ஆசமநீயம், 5. ஸ்நாநம், 6. வஸ்த்ரம் முதலியன, 7. கந்தம், 8. அக்ஷதம், 9. புஷ்பம், 10. தூபம், 11. தீபம், 12. நீராஞ்சனம், 13. நைவேத்தியம், 14. பாநீயம், 15. தாம்பூலம், 16. புஷ்பாஞ்சலி. இவற்றுட் சிலவற்றை மாற்றிச் சொல்வதுமுண்டு.

செய்யும் ஷோடசோபசார பூசையும், அறுபத்துநாலு உபசாரங் களோடு செய்யும் சது: ஷஷ்ட்யுபசார பூசையும், எழுபத்திரண்டு உபசாரங்களோடு செய்யும் துவி சப்தத்யுபசார பூசையும் என்பன பூஜா கற்பங்களிற் சொல்லப்பட்டுள்ளன. பராசக்தியாகிய அம்பாளுக்கு "சது: ஷஷ்ட்யுபசாராட்யா" என்பதும் ஒரு திரு நாமம். அறுபத்துநாலு வகையான உபசாரங்களைச் செல்வமாக உடையவள் என்பது அதன் பொருள். அறுபத்துநாலு (64) உபசாரங்களையும் மனத்தினு லமைத்து அவற்றைக்கொண்டு தேவியை மானஸிகமாகப் பூசை செய்வதாக அமைந்த ஒரு தோத்திரம் ஸ்ரீமத் சங்கரபகவத்பாதாசாரிய சுவாமிகளால் வட மொழியில் அருளிச் செய்யப்பட்டுள்ளது. அதனைத் தமிழில் மொழிபெயர்த்து யாத்தது இவ்வந்தாதிப் பிரபந்தமென்பது.

வடமொழி மூலத்துள்ள 72 சுலோகங்களையும் 74 செய்யுட் களாக அமைத்தும், இடையில் (60-ம் செய்யுள் முதல் 85-ம் செய்யுள் முடியவுள்ள) 26 தோத்திரச் செய்யுட்களைப் புதிதாக இயற்றிச் சேர்த்தும், நூறு 'கட்டளைக் கலித்துறைப் பாக்கள் கொண்ட அந்தாதியாக இதனை அமைக்கலாயினன். தமிழ்ப் புலமையில்லேன் எனினும் தேவியைத் தமிழிற் றுதிசெய்யும் ஆசைமிகுதியால், 'தேவி மானச பூசை அந்தாதி' யென்னும் இத் தமிழ் நூலை,

"மால்சேர்ந் துரைத்தேன் தமிழ்ப்பா வழவுற்ற தேனும்
நால்சேர்ந்த சான்றீர் குணமேன்மை நுவன்று கோண்மின்
பால்சேர்ந் ததனற் புனலும் பயனுவ தேபோல்."

சுன்னுகம்,
2-10-50.

தி. சதாசிவ ஐயர்



# பதிப்புரை

'தேவி மானச பூசை அந்தாதி' என்னும் இந்நூல் பண்டிதர் ஸ்ரீ. வே. மகாலிங்கசிவம் அவர்கள் ஞாபகார்த்தப் பதிப்பாக வெளிவருகிறது.

I

## பண்டிதர் ஸ்ரீ. வே. மகாலிங்கசிவம்

ஸ்ரீ. மகாலிங்கசிவமவர்கள் 'பிள்ளைப்புலவர்' என்றும் 'உரையாசிரியர்' என்றும் சிறப்புப் பெயர் வாய்ந்து விளங்கிய மட்டுவில் க. வேற்பிள்ளை யாசிரியரவர்கட்கு அவர் மனைவியார் மகேசுவரியம்மையார் வயிற்றில் ஐவர் புதல்வருள் மூன்றுமவராக — நடுமணியாக — க் கரவருடம் (1891) பிறந்தனர். இவர் இருமரபுந் தூய புலவர் குடியில் நடுமணியாக — புத்திரரத்தினமாக — ப் பிறந்தது, பிற்காலத்தில் புலவர்கள் சபையில் சபாரத்தினமாக விளங்கினதற்கு ஒரு சூசகமாக இருந்ததென்னலாம். கருவிற் றிருவுடையவராகத் தோன்றிய மகாலிங்கசிவமவர்கள் அவர் தந்தையார் சிதம்பர சைவப்பிரகாச வித்தியாசாலையில் தலைமையாசிரியராக இருந்தகாலத்து உடனிருந்து அவரிடம் தமிழ் இலக்கியங்களும் பஞ்ச இலக்கணமும் முறைப்படி பாடங் கேட்டவர். பின்பு யாழ்ப்பாணத்தில் ஸ்ரீ இராமநாதன் கல்லூரியில் சிலகாலம் தமிழாசிரியராகவிருந்தார். அதன்பின்பு கோப்பாய் அரசினர் ஆசிரியர் கலாசாலையில் தமிழ்ப் புலமை நடாத்தி, ஆசிரிய மாணவர்க்கும் ஏனையர்க்கும் இலக்கிய ரஸானுபவமாகிய விருந்தளித்திருந்தார்.

பண்டிதர் மகாலிங்கசிவமவர்கள் அநாயாசமாகக் கவி இயற்றும் வன்மை வாய்க்கப்பெற்றவர். சிறுபிராயத்திலேதானே இவருக்குக் கவி செய்யும் சக்தி வந்துவிட்டது (நல்லூர் - சின்னத்தம்பிப் புலவருக்குப்போல). 12-ம் பிராயம்வரையில் பள்ளியிற் படித்த காலத்திலே "பழனிப் பதிகம்" என ஒரு பாடல் இவர் இயற்றலானார். பிற்காலத்தில் அன்பர்கள் வேண்டும்போதெல்லாம்

உடனுக்குடனே பாடலியற்றிக் கொடுப்பார். எனினும் தான் ஏதோ அரிய காரியம் செய்ததாக எண்ணுவதில்லை. அவர் மறைவதற்கு (1941 - ல்) இரண்டொரு வருடங்கள் முன்னதாகக் காஞ்சிபுரம் யாத்திரை சென்றார். அப்போது காமாட்சியம்மை சன்னிதியில் இயற்றியதாக அம்மை பேரில் ஒரு பதிகம் எனக்குப் படித்துக் காட்டியதுண்டு. அது இப்போது கிடைப்பதாக இல்லை. பழைய கவிகளுடைய பாடல்களைப் படித்து ரஸித்தலிலும், மாணவர்களுக்கும் மற்றவர்களுக்கும் சுவைப் பிழம்பாகிய கவிப் பிரசங்கஞ் செய்தலிலும், எப்போதும் தேவியை யாராதித்தலிலும் மனஞ் சென்றிருந்தமையாற் போலும் அவர் தாமாகப் புதிய பாடல் எதுவுஞ் செய்யுமெண்ணம் கொண்டிலர். தமிழிலும் சம்ஸ்கிருதத்திலும் ஒத்த அன்பும் அபிமானமு முடையவர்.

புலமை நிரம்பியமைந்த உள்ளம், தன் பெருமையை எண்ணாத எளிவந்த சுபாவம், சதா காவிய உலகிற் சஞ்சரித்து இன்புறுதல், இவற்றையெல்லாம் ஊடுருவி நிற்கும் திரிபுரசுந்தரி தேவி பக்தி ஆகிய இந் நாலு அமிசங்களும் ஒருங்கு சேர்ந்ததே பண்டிதரவர்களுடைய தனிப் பண்பு. இவர் பற்றற்ற சமரச ஞானியாகத் தம் வாழ்க்கையை நடத்திப்போயினர். "தன் பெருமை தானறியாத் தன்மையர்" என்னும்படி வாழ்ந்து காலஞ்சென்ற புலவர் குலக் கொழுந்து ஸ்ரீ பண்டிதர் மகாலிங்கசிவம் அவர்களது நினைவு மங்காது என்றும் நின்று நிலவுவதாக.

## II

தேவி மானச பூசை அந்தாதியாகிய இதனையும் இதற்கு மூன்று மாதங்களுக்கு முன்பு வெளிவந்த 'இருது சங்கார காவியம்' என்னும் நூலையும், தமது தாபனத்துக்குரிய தனிப் பண்பான சீர்மை துலங்க அழகாக அச்சிட்டுதவிய திருமகள் அழுத்தகத்து அதிபர் ஸ்ரீமாந், நா. பொன்னையா, ஜே. பி., அவர்களது நன்றியைப் பாராட்டுகின்றேன். தமிழ்த் தெய்வம் இவர்களுக்கு நோயற்ற வாழ்வும் காரிய சித்தியும் அளித்துக் காப்பதாக.

இந்த இரண்டு புத்தகங்களையும் அச்சிட்ட கூலிக்காகிய பணம் முழுவதையுங் கொடுத்து நிறைவேற்ற இப்போது எனக்கு இயலாமையால் சில நண்பர்களுடைய உதவியை நாடினேன். எனது வேண்டுகோளுக் கியைந்து மனமுவந்து பொருள் உபகரித்து என்னை ஊக்கப்படுத்தி உதவிபுரிந்த பெருந்தகையாளரது நன்றி என்றும் என்னாற் போற்றி நன்றியறிதலோடு பாராட்டப்படுவது.

தமிழ் அன்னைக்குச் செலுத்தும் காணிக்கையாகப் பொருள் உபகரித்துதவிய அன்பர்கள் பெயர் முதலியன வருமாறு :-

| | | | | ரூ. ச. |
|---|---|---|---|---|
| 29-5-50 | Dr. S. சுப்பிரமணியம் | அவர்கள் | யாழ்ப்பாணம் | 10-00 |
| 1-8-50 | ஸ்ரீ. ச. கணபதீசுவரக்குருக்கள் | ,, | காரைநகர் | 10-00 |
| 8-8-50 | ஸ்ரீ கா. சி. மகேசசர்மா | ,, | நொத்தாரிஸ் ,, | 10-00 |
| 16-8-50 | ஸ்ரீ. வே. தா. சி. சிவகுருநாதர் | ,, | மேலைப்புலோலி | 5-00 |
| 23-8-50 | ஸ்ரீ. K. S. அருணந்தி M. Sc. | ,, | கொழும்பு | 15-00 |
| 4-9-50 | இராசவாசல் முதலியார் ஸ்ரீ. நா. கனகநாயகம் J. P. | ,, | கண்டி | 10-00 |
| 6-9-50 | ஸ்ரீ. மு. வைரமுத்து | ,, | கொழும்பு | 25-00 |
| ,, | ஸ்ரீ. S. இராசரத்தினம் | ,, | அப்புக்காத்து யாழ்ப்பாணம் | 10-00 |
| 7-9-50 | ஸ்ரீ. S. சிவசுப்பிரமணியம் | ,, | Proctor, கொழும்பு | 10-00 |
| ,, | முதலியார் ஸ்ரீ. S. கந்தையா | ,, | நல்லூர் | 10-00 |
| ,, | ஸ்ரீ. தி. ச. சிவசுப்பிரமணியக் குருக்கள் | ,, | திருக்கோணமலை | 5-00 |
| 11-9-50 | ஸ்ரீ. செ. ரங்கநாதன் | ,, | அப்புக்காத்து | 10-00 |
| 16-9-50 | ஸ்ரீ S. K. இராசசிங்கம் B. A. | ,, | கொழும்பு | 10-00 |
| 20-9-50 | பண்டிதர் ஸ்ரீ. தி. சுப்பிரமணியஐயர் | ,, | த. ஆ. உடுவில் | 10-00 |
| 30-9-50 | பண்டிதர் ஸ்ரீ. தி. விசுவநாதக்குருக்கள் | ,, | ,, | 10-00 |
| ,, | ஸ்ரீ இ. சோமசுந்தரக்குருக்கள் | ,, | காரைநகர் | 5-00 |
| ,, | ஸ்ரீ. வே. மாணிக்கவாசகன் | ,, J P., U. M. Proctor | கொக்குவில் | 10 00 |
| ,, | பண்டிதர் ஸ்ரீ. தி. இரத்தினசபாபதிக் குருக்கள் | அவர்கள் | வண்-மேற்கு | 10-00 |
| ,, | வே. நடராசா | ,, | காரைநகர் இந்துக்கல்லூரி | 10.00 |

சுன்னாகம், 5-10-50.

தி. சதாசிவஐயர்



ஸ்ரீமத் திரிபுர சுந்தரி.

நாலாயதிருத்தோளாய் நற்பிறைக்கீற்றணிமுடியாய்
மேலாக நிமிர்குயத்தாய் மேதகுகுங் குமநிறத்தாய்
கோலாகு மலர்பாசாங் குசம்வரியார் கழைவில்லுப்
பாலாகுங் கரதலத்தாய் பணிவனினை யுலகன்னே.



உ

சிவமயம்

அம்மை அப்பர் துணை

# தேவி மானச பூசை அந்தாதி

## காப்பு

**து**தியார் திரிபுர சுந்தரிக் கெண்ணெண் தொகைமருவ
யதியார் இயம்புப சாரவுட் பூசை யியற்றுதுதி
விதியார் தமிழில் விளம்ப வருந்துணை வெண்கொழுந்து
மதியார் சடில வரனுமை யீன்ற மழகளிறே.

## நூல்

### பள்ளியெழுச்சி

**மங்**கல கீதங்கள் மாகதர் வைகறை வாழ்த்தெடுத்தார்
கங்குல கன்றது காண்துயில் நீத்துக் கடிதெழுவாய்
தங்குல குக்கொரு தாயே கருணை ததும்புவிழிப்
பொங்குல வாவருள் பூத்தெமை நோக்கிப் புரந்தருளே. 1

---

காப்பு:— திரிபுரசுந்தரிக்கு எண்ணெண் உபசார உட்பூசைத் துதி தமிழில் விளம்ப மழகளிறு துணைவரும் என வாக்கியம் முடிக்க.

திரிபுரையும் சுந்தரியும் ஆயவள் திரிபுரசுந்தரி. இது பார்வதி தேவியின் நாமத்துள் ஒன்று. திரிபுரை (த்ரிபுரா) — மூவர்க்கும் முந்தியவள் எனவும் மூன்றானவள் எனவும் பொருள்படும் நாமம்; சுந்தரி — அழகில் மேம்பட்டவள், அபிராமி என்பதுபோல; அபிராமம் — அழகு; அபிராமன் — சிவன். எண்ணெண் உபசாரம் — 64 உபசாரம். உபசாரம் — வழிபாட்டிற் செய்யப்படும் மரியாதை (க்கொடை). யதி — துறவி. இங்கு யதியார் என்றது ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளை.

உட்பூசை — அகப்பூசை, மானசபூசை. விதி ஆர் — இலக்கண வரம்பு அமைந்த. மதி ஆர் சடிலத்தை உமைக்குங் கூட்டியுரைக்க. சடிலம் — சடை, மயிர்முடி. வரன் — சிவன். மழகளிறு — யானைக் கன்று, இங்கே விநாயகக் கடவுளைக் குறிப்பது; மழ — இளமை.

செய்யுள்: 1. மாகதர் — துதிபாடுவோர், மங்கலபாடகர். உலவா அருள் — குறையாத அருள். புரத்தல் — பாதுகாத்தல்.

### அழைத்தல்

**அ**ருள்சுரந் தென்பா லனையுனை யான்செ யருச்சனையைப்
பொருள்புரிந் தேற்றற் பொருட்டு விரைந்து பொலத்தியன்ற
இருள்கடி வேதிகை யேய்ந்து நிறைகுட மெத்திசையும்
மருள்கெட மன்னு மணிச்சாலை மத்தியில் வந்தருளே. 2

### ஸ்நான மணிமண்டபம்

**வ**ந்து பகவதி நீவாசஞ் செய்ய வயங்குபொன்னிற்
றந்த கலசங்கள் சார்சிக ரத்தது தாரைமுகிற்
பந்தி படியும் படியது நீடு பதாகையது
சிந்தை மணிமயத் தெய்வா லயமிது சேர்த்துவனே. 3

### சிவிகை

**சே**ரத் தமணியத் தாற்செய்து தூலிகை சேர்த்திமிசை
யாரப் புதுமென் கலிங்கம் விரிநீ லமைவுடைத்தாய்
ஊரப் பெரிது முவப்பாய் நவமணி யொன்றுமலங்
காரச் சிவிகை யிதுநேர்ந் தனனன்னை காணுனக்கே. 4

### சிங்காசனம்

**கா**ண்டகு வேதிகைப் பாலது கோடி கதிரின்வண்ணம்
பூண்டது பன்மலர் தூவிப் பொலிமெல் லணைபொருந்தும்
மாண்டகு சிங்கா சனமிதி லன்னை மகிழ்ந்திருப்பாய்
பூண்டகு பாதம் பொலன்படி மீது பொருந்தவைத்தே. 5

---

2. பொலத்து இயன்ற — பொன்னாற் செய்த; பொலம் — பொன். வேதிகை — பூசைசெய்யும் இடம், மேடை. மருள் — மயக்கம், அச்சம். அனை! என்பால் அருள் சுரந்து அருச்சனையை யேற்றற்பொருட்டுச் சாலை மத்தியில் விரைந்து வந்தருள் எனக் கூட்டி முடிக்க.

3. கலசம் — தூபி, குடம். சிகரம் — உச்சி, கோபுர நுனி. படியது — தன்மையது. பதாகை — கொடி. சிந்தை மணி — சிந்தாமணி. சிந்தை மணி மய ஆலயம் — சிந்தாமணி கிருகம்.

4. சேர — முழுதும். தமனியம் — பொன். தூலிகை — மெத்தை. கலிங்கம் — ஆடை. ஊர — இவர்ந்துசெல்லுதற்கு. சிவிகை — பல்லக்கு. நவ மணி — ஒன்பதுவகை இரத்தினங்கள்.

5. பாலது — பக்கத்திலுள்ளது. கதிரின் வண்ணம் — சூரியப் பிரகாசம்; கதிர் — சூரியன். படி — பாதபீடம்.

மேற்கட்டி

**பொ**ருந்தத் தொடுத்தது பொற்கம்ப நான்கிற் புகலரிய
பெருந்தக் கதுமணி முத்தங் குயின்று பிறங்குபெட்புத்
தருந்தக்க மாண்பது சாலப் புதிதாய்த் தயங்குமெழில்
திருந்தச் சமைந்தவி தானமி தாக்கினன் தேவிநிற்கே. 6

பாத்தியம்

**நி**ன்றனக் காகிய பாத்தியம் அன்னை நிறைவிரைப்பூத்
துன்றின தம்புயம் விட்டுணு காந்தியும் தூர்வைமற்று
நின்றன பல்பொரு ளுங்கூட் டியதிது நேர்ந்தனன்சீர்
ஒன்றின பாத சரோருக தேவி யுவந்துகொள்ளே. 7

அருக்கியம்

**கொ**ள்ளும் விரைமலர் சந்தனங் கூட்டிக் குளிரறுகும்
எள்ளும் கடுகி யவமட் சதையும் இயல்தருப்பைக்
கிள்ளும் கலந்து கெழுமணி சேர்த்திக் கிளர்பசும்பொன்
வள்ளம் தனில்மன் னருக்கியம் அன்னை மகிழ்ந்துகொள்ளே. 8

ஆசமனீயம்

**ம**கிழுறு சந்தனந் தக்கோலத் தோடில வங்கமெனும்
புகழுறு வாசப் பொருள்சாதிக் காயும் பொருந்திமிகத்
திகழுறு மாசம நீய மினிமை செறிந்தமிழ்தை
யிகழுறு நீரது தேவி மலர்க்கரத் தேற்றருளே. 9

---

6. பொற்கம்ப நான்கிற் பொருந்தத் தொடுத்தது எனக் கூட்டுக. குயின்று – பதித்து, இழைக்கப்பட்டு. பெட்பு – விருப்பம், ஆசை. சமைந்த – அமைந்த.

7. பாத்தியம் – பாதத்திற்குரியது; கால் அலம்பக் கொடுக்கும் நீர். விட்டுணுகாந்தி – விஷ்ணுக்கிராந்தி. தூர்வை – அறுகு. நின்றன – பொருந்தியன, எற்றன. பாத சரோருகம் – பாத தாமரை.

8. அருக்கியம் – அர்க்கியம்; அர்க்கம் – பூசனை, அர்க்கியம் – பூசனைக்குரியது; பூசனைப்போது உபசாரமாகக் கொடுக்கப்படும் அட்சதை அறுகு முதலியன கலந்த நீர். கொள்ளும் விரை என்பதை விரை கொள்ளும் என மாற்றிப் பொருள் கொள்க. கடுகியவம் – கடுகும் யவமும்; யவம் – வாற்கோதுமை. வள்ளம் – கிண்ணம்.

9. ஆசமநீயம் – ஆசமன நீர்; ஆசமனம் – (வலதுகையால் மும்முறை) நீரையுட்கொள்ளுதல். வலதுகையை நடுவிற் குழிவிழச்செய்து நடுவிரல் மூன்றும் சேர்த்தும் சிறுவிரலும் பெருவிரலும் வேறாகவும் நிற்கப் பிடித்து, உளுந்து மறையக்கூடிய அளவான நீரை ஓசையுண்டாகாமல் வாயில் விடுதல் ஆசமனம் செய்யும் முறையாகும்.

மது பருக்கம்

ஏற்றருள் வாய்மது பர்க்க மிதனை யிலகுபொன்னின்
மாற்றுயர் பேழையில் வைத்து மணிமய மூடிகொடு
போற்றிய தாருயிர் முற்றும் புரக்கும் திரிபுரையே
மாற்றரு மன்பினில் நேர்ந்தது நிற்கு மகிழ்சிறந்தே. 10

எண்ணெய்க் காப்பு

சிறந்துள சம்பக தைலம் நறுமலர் சேர்ந்தயல்
அறைந்தளி சூழ்வதென் கையின் மணிவள்ளத் தார்ந்ததுமீ
துறைந்துழல் வண்டு மயங்கு குழற்கு முடற்குமன்பு
நிறைந்துள தேவ மகளிர்நின் றூட்டுவர் நேயமுற்றே. 11

பொற் சுண்ணம் — நெல்லிக் காப்பு

நேய முடனன்னை நேர்ந்தனன் குங்கும நீடுபொன்னின்
ஆய பொடிமலர்த் தாதிவை யங்க மவற்றினுக்குத்
தூய குழற்சுசிக் காமல கத்திடி யுஞ்சுகந்த
மேய மிருக மதஞ்சேர்வெந் நீரும் வியன்குடத்தே. 12

பஞ்சாமிர்தம்

வியனுறு கோவருள் பால்தயிர் நெய்யொடு வெண்மைத்தாம்
பயனுறு சர்க்கரை கோற்றேன் கலந்தபஞ் சாமுதத்து
நயனுற வாட்டுவ னன்னே நினக்கு நயந்துகொள்நின்
வயினுறு மன்பினின் வெந்நீ ரினுநல்கு வன்முறையே. 13

---

10. மதுபர்க்கம் — மதுவோடு சேர்ந்தது ; மது — தேன், பர்க்கம் — சேர்ந்தது ; தேனுடன் தயிர் நெய் முதலியன சேர்த்து உபசாரமாகக் கொடுக்கப்படும் பொருள். இதுவும் ஆசமனம் செய்யப்படுவது. போற்றியது நேர்ந்தது (ஆகிய) மதுபர்க்கம் இதனை மகிழ்சிறந்து ஏற்றருள் வாய் எனக் கூட்டி முடிக்க.

11. அயலில் அளி அறைந்து சூழ்வது ; அளி — வண்டு ; அறைந்து — சத்தித்து, பாடி. தேவியின் கூந்தல் இயற்கை வாசனையுடையது, அதனால் வண்டுகள் மயங்கி அதன்மீது உறைந்து உழலுகின்றன என்பதாம்.

12. குங்குமம் — குங்குமப்பூ. பொடி — சுண்ணம். மலர்த்தாது — பூந்தாது. சுசிக்கு — சுத்தமாவதற்கு. ஆமலகத்து இடி — நெல்லிப்பருப்பை இடித்த தூள். மிருகமதம் — கஸ்தூரி. வியன் — பெருமை. வியன் குடம் — பொற்குடம்.

13. வியன் உறு கோ — கபிலைப் பசு. கோல் தேன் — கொம்புத் தேன், கொப்பாந்தேன்.

மந்திரித்த புண்ணிய தீர்த்தம்

**மு**றைதரு கங்கை முதற்பல தீர்த்த முயன்றுதந்து
நறைதரு வேர்பன் மலரேலங் கூட்டி நகுமணிபொன்
நிறைதருங் முத்திவை நீடு மமுத நிகர்சலத்தால்
அறைதரு வேதா கமமனு வோதிநிற் காட்டுவனே. 14

செம்பட்டாடை

**வ**ன்னங் கெழுதுகி லன்னே யளிப்பன் வயங்குதய
மன்னு மிரவிசெம் மாதுளம் போதவை வாட்டிநலந்
துன்னுங் கஞ்சுகமது தூயமுத் தேல்கஞ் சுகமதுவும்
மின்னும் பசும்பொ னிறமிகு போர்வையு மேவிக்கொளே. 15

பாதுகை

**மே**விய பொன்னி னியன்று நவமணி மேன்மைதகப்
பாவிய பெட்புயர் பாதுகை நல்குவன் பாங்குபெறத்
தேவிய தேற்றருள் செய்து விலாசந் திகழமரைப்
பூவியன் மென்றுணைப் பொன்னடி சேர்த்துதி பொற்புறவே. 16

கூந்தல் திருத்தி முடித்தல்

**பொ**ற்பார் பகவதி பொங்ககி லின்புகை யூட்டிப்பொலம்
வற்பாருஞ் சீப்புக் கொடுகேசம் வாரி வனப்புறுத்தி
அற்பா ருளத்தொ டரவிந்தஞ் சம்பக மாரநல்கிப்
பொற்பாசத் தானின் பொருவில் குழன்முடி போற்றுவனே. 17

---

14. நறை – வாசனை. நறைதருவேர் – வெட்டிவேர். நகுமணி – ஒளிவிடுகின்ற இரத்தினம். அறைதரு – ஓதப்படுகின்ற. வேத ஆகம மனு – வேத மந்திரமும் ஆகம மந்திரமும்; மனு – மந்திரம். ஓதி – சொல்லி.

15. வாட்டி – வென்று. உதயகால சூரியனது செவ்வொளியையும் மாதுளம்பூவின் செந்நிறத்தையும் வென்று விளங்கும் சிறப்பினை யுடைய சிவந்த துகில் என்க. முத்து ஏல் – முத்தினால் இயன்ற. கஞ்சுகம் – சட்டை, ரவிக்கை. மேவி – விரும்பி.

16. பாவிய – பதித்த, அழுத்திய. விலாசம் திகழ – அழகு விளங்க, சிங்காரமாக. மரைப்பூ – தாமரைப்பூ; மரை – தாமரை.

17. பொற்பு – அழகு. வற்புஆரும் சீப்பு – வலிய சீப்பு. வனப்பு உறுத்தி – அழகுபெற முடித்து. அற்பு – அன்பு. ஆர – நிறைய. பொற் பாசம் – பொற் கயிறு. போற்றுவன் – (கட்டிப்) பாதுகாப்பேன்.

### அஞ்சனம்

போற்றுநின் கண்ணிணைக் காம்பொனின் கோலாற் பொருந்து
தீற்றுங் கரியவிவ் வஞ்சனந் தேவி சிறிதுநவை [மன்பிற்
தோற்றுபுன் னீர்மைய தேனுநின் கண்ணிணை சூழ்தொடர்பா
லேற்றமுற் றிந்திர னாதிய ரும்விழை யேண்பெறுமே. 18

### ஆடாரணம்

ஏணுறு பாதச் சிலம்பு மிடைக்கெழின் மேகலையு
மாணுறு கொங்கைகட் காரமுந் தாரகை மாலைகளன்
காணுறு தோளணி கைக்கு வரிவளை காதுதனிற்
பூணுறு தோடும் முடிக்கு மணியும் புனைகுவனே. 19

புனைமென் குழலிற்பொற் பூவா ணுதலிற் பொருந்துமுத்தால்
வனையுந் திலகம் மணிநாசி முத்திடைக் காம்மணிகள்
அணைநின் குயத்திற் கணிமுத்தின் வாரு மணிவன்விரல்
தனிலங் குலிய மணித்தொங்கல் காதிற் றகைபெறவே. 20

### கஸ்தூரித் திலகம் — பரிமள கந்தம்

தகையுறு நெற்றியிற் கர்ப்பூர மான்மதந் தண்ணகிலும்
அகையுறு சேர்வைத் திலக மணிவன்மெய்க் கார்விரையும்
வகையுறு கந்தக் கலவை நகிற்கு மலர்ப்பனிநீர்
தொகையுறு சாந்தம் பதத்திற்கு நல்கித் தொழுவனன்னே. 21

---

18. கோல் – மைதீட்டும் கோல். தீற்றுதல் – பூசுதல். அஞ்சனம் – மை. நவை – குற்றம். ஏண் – வலிமை, பெருமை.

19. ஆரம் – முத்துமாலை. தாரகை மாலை – நட்சத்திர மாலை. இது ஏகாவலீ யெனப்படும்; 27 முத்துக்கள் கோத்துக் கழுத்தில் அணியப்படும் மாலை. களன் – கழுத்தில். முடிக்கு மணி – உச்சியிற் சூடாமணி.

20. முத்தால் வனையும் திலகம் – முத்தைத் திலகமாகத் தரித்தல். மணி நாசி முத்து – அழகிய மூக்கில் மூக்குத்தி முத்தும். இடைக்கு ஆம் மணிகள் – இடையில் அணியத்தகும் சதங்கைமணி (க்கோவை). குயம் – முலை. மணித் தொங்கல் – காதில் தொங்க அணியும் இரத்தினத்தூக்கம்; தொங்கட்டான்.

21. அகையுறு – உயர்ந்து விளங்குகின்ற. மெய்க்கு ஆர் விரை – உடலுக்கு நிரம்ப வாசனைப்பொடி. நகில் – முலை. சாந்தம் – சந்தனம்.

அக்ஷதை

**தொ**ழத்தகு தேவிநிற் பூசிப்பன் தூய சுடர்மணியால்
விழுத்தகு தோளா வியன்முத்தி னல்முரி யாவிதத்து
முழுத்தகு நல்யவத் தாற்குங் குமத்து முறைகெழுமுன்
குழைத்ததொர் தண்டுலத் தால்வரு மட்சதைக் கொண்டினிதே.

மெய்ப்பூச்சு (விலேபனம்)

**இ**னிதிவை நான்கு முவந்தேற் றருளிங் கிலகுமிகு
புனிதம தாஞ்சம் பகதைல நாவிப் புழுகுவிரை
நனிதரு வாசப் பொடியு நவையில் நறைகமழும்
பனிதரு சாந்தமு மாமுல கேத்து பகவதியே. 23

சீமந்த சிந்தூரம்

**ப**கவதி நின்னள கம்பகிர் மத்தி பயிலவைத்த
தகவதி கங்கெழு சிந்தூர மென்மனத் தாமரையிற்
புகவதி மோத மழைபோதச் செய்து பொலியுதயப்
பகலவ னேர்செவ் வொளியா லகவிருள் பாற்றுமன்றே. 24

பூச்சூடல்

**அ**ன்றலர் பூக்கள் அலரிமந் தார மவிர்தளவந்
துன்றில வங்க மிவைகொடு தேவி தொழுவனிதம்
மன்றல ளாவுறு சம்பகஞ் சாதி மகிழமலர்
நன்றலர் கைதை யரத்த முதலவு நல்குவனே. 25

---

22. அக்ஷதை – மங்கலஅரிசி. க்ஷத – பின்னமடைந்த; அக்ஷத – பின்னமடையாத, முழுதான என்பதாம். தோளா – துளைக்கப்படாத. வியன் – பெருமை. இரத்தினம், முத்து, யவம், குங்குமம் தடவிய அரிசி என்னும் நாலுவகையான அட்சதையாலும் பூசிப்பதாகச் சொல்லியிருத்தல் காண்க. தண்டுலம் – அரிசி.

23. சம்பக தைலமும் புழுகும் வாசப் பொடியும் சாந்தமும் ஆம் இவை நான்கும் உவந்து ஏற்றருள் என்க.

24. சீமந்தம் – பெண்களின் தலைமயிரை வகிர்தலால் உச்சியில் உண்டாகும் கோடு. அளகம் – தலைமயிர். சிந்தூரம் – செந்நிறப் பொடி; சுமங்கலிகள் நெற்றியிலும் உச்சியிலும் சிந்தூர திலகம் அணிதல் பாரத தேசத்து வழக்கம். மோத மழை – மோதமாகிய மழை; மோதம் – மகிழ்ச்சி. அதிமோதமாகிய மழையை மனத் தாமரையில் போதப் புகச்செய்து எனக் கூட்டுக. போத – மிக. பாற்றும் – அகற்றும், அழிக்கும்.

25. தளவம் – முல்லை. மன்றல் – வாசனை. கைதை – தாழம்பூ.

### பூவா லருச்சித்தல்

நலத்தகு மாலதி மத்த மசோகுபுன் னுகமகிழ்
சொலத்தகு தேமாத் துணர்க்கர வீரந் துலங்குகைதை
வலத்தகு விட்டுணு காந்திநற் கோங்க மலர்முதலா
நிலத்தகு பூக்கொ டருச்சிப்ப னின்னை நிவப்புறவே. 26

நிவங்கெழு சம்பக நீள்பாரி சாத நிறைபுனலிற்
றுவங்கெழு தாமரை யுற்பலம் பாடலந் தூமல்லிகை
நவங்கெழு மின்னன நாநா வகைய நறுமலராற்
சிவங்கெழு நின்றிரு மேனியைப் பூசிப்பன் தேவிநன்கே. 27

### தூபம்

நன்குறு சந்தனங் கர்ப்பூர நாறகில் நல்லரக்கு
மின்னுறு பச்சைக் கருப்பூரந் திப்பலி வேர்பசுநெய்
மன்னுறு குக்கில் வகைதேவ தாரம் வளங்கெழுதேள்
துன்னுத சாங்கநற் றூபமி தேற்றருள் தூமணியே. 28

### தீபம்

தூய மணிபுனை சொன்னத் தகழியில் தூத்திரியும்
ஏய பசுவி னிழுது நிறைத்துநன் கேற்றியிருள்
தேய வகற்றிளஞ் செங்கதிர் போலொளிர் தீபவகை
நேய முடனன்னை நேர்குவன் நீராஞ் சனநிதமே. 29

### நைவேத்தியம்

நிதமுனக் கன்னை நிவேதித் தருத்துவன் நெல்லின்வரு
பதமுறு மோதனம் பால்தயிர் பாயசம் பாலடுவும்
விதமுற பூபம் பருப்பு வடகம் விரும்புகண்டோ
டிதமுறு தேனுய ராவினெய் வாழை யிருங்கனியே. 30

---

26. துணர் — பூங்கொத்து. கரவீரம் — அலரி. நிவப்பு — உயர்ச்சி.

27. துவங்கெழு — நிலைபெற்று வளரும். உற்பலம் — குவளைப்பூ. நவம் — புதுமை. நாநாவகைய — பலவகையான. சிவம் — நன்மை, மங்கலம்; சிவசொரூபமான எனினுமாம்.

28. குக்கில் — குங்கிலியம்.

29. சொன்னம் தகழி — பொன் தட்டு. தூ — வெண்மையான. இழுது — நெய். இளம் செங்கதிர் — உதய சூரியன். நீராஞ்சனம் — தீப மேற்றிய நீராலத்தி (சுற்றல்).

30. ஓதனம் — அன்னம், சோறு. அடு — அட்டது, காய்ச்சியது; பாலடு — வற்றக்காய்ச்சிய பால், திரட்டுப்பால்; பாலேடுஎனினுமாம். விதமுறு அபூபம்—விதம் விதமான அப்பம்; அப்பவகைகள். கண்டு—கற்கண்டு.

இருத்திய சாக வகையின் கறியமு தேலமல்லி
திருத்திய காயநற் சீரக மஞ்சள் சிறந்தசுக்கோ
டருத்திய தாக வமைத்துவிண் ணோர்த மமுதினுமேல்
விருத்திய தாஞ்சுவை மேவு மிவையும் விருப்புறவே. 31

விருப்புற வாக்கு பரமான்ன மாதி வெகுபண்ணியம்
பருப்புறு நெய்தயிர் பால்கண் டிவையும் பரவுசுவை
யிருப்புறக் காய மிளகுநற் சீரக மேய்ந்தகறி
யுருப்புற நேர்ந்த உவந்துகொள் வாயுல குக்கொரன்னே. 32

அன்னை சுரபி யருள்பா லிதுசுவை யார்ந்துமிகத்
துன்னு நறுநெ யிதுகாண் டொடர்ந்தளி சூழ்ந்துமிசை
மன்னு நிறங்கெழு தேனிது மற்றிது வானமுதந்
தன்னை நிகர்தரு தீம்புன லாருதி சால்புறவே. 33

வாய்பூசறுத்தல்

சாலும் பொலன்பா சனந்தாங்கு வெய்ய சலிலமிது
கோலந் திகழ்வாய்க் கொடுபூ சறுத்தபின் குங்குமமும்
ஏலும் பளிதமுங் கூட்டி யிழைத்த எழிற்சந்தனத்
தாலங் கரமல ரன்னே யுலர்த்துதி யாசறவே. 34

கங்காசல பானம்

ஆசறு மென்றுகி லார வடித்ததி தூய்மையது
தேசுறு பொற்கல சந்தனிற் சேர்ந்து சிறந்துவிரை
வீசுறு வெட்டிநல் வேருட ளாவி வியனமுதை
யேசுறு சீதகங் காசல மீதன்னை யேன்றுகொள்ளே. 35

---

31. இருத்திய — மேன்மை பொருந்திய. சாகம் — இலைக்கறி. காயம் — பெருங்காயம். அருத்தியதாக — விரும்பத்தக்கதாக. சுவை மேவும் இவையும் விருப்புற நிவேதித்து அருத்துவன் என முந்தின செய்யுளோடு கூட்டி முடிக்க.

32. பரமான்னம் — சருக்கரையமுது. பண்ணியம் — பலகாரம். உருப்பு உற — மிகுதியாக. நேர்ந்த — நேர்ந்தன, நிவேதித்தவற்றை.

33. சுரபி — காமதேனு. சால்பு — பொருத்தம். சிறப்பு. இவற்றை ஆருதி என ஒரு சொல் வருவித்துரைக்க.

34. பாசனம் — பாத்திரம், கலம். வெய்யசலிலம் — வெந்நீர். பூசறுத்தல் — சுத்திசெய்தல். குங்குமம் — குங்குமப்பூ. பளிதம் — பச்சைக் கர்ப்பூரம். சந்தனத்தால் — சந்தனத் தூளால்.

35. ஆசு அறு — குற்றமற்ற, சுத்தமான. துகில் — துகிலால். ஆர — செவ்வையாக, நன்கு. வடித்து அதி தூய்மையது; பூசை,

கனிவகை

**ஏ**ன்றுகொள் தேவி யினிதுறு நாவ லிருங்கனியு
நான்றுறு வாழை நறுங்கனி மாவின் நயந்தகனி
தோன்றுதி ராட்சைத் துறுகனி தீங்தேன் துவரினிரை
போன்றுறு மாதுளை யின்கனி தெங்கின் பொலிபழமே. 36

**பொ**லிதரு செவ்விகொள் பொன்னெனு மிச்சைபொற் பார்
மலிதரு நாரங்க வான்கனி முத்தென வண்ணமுறு [வருக்கை-
வலிதரு மாதுளை யின்கனி மன்னு வதரியெனச்
சொலிதமு றுங்கனி தூயன வாமிவை துய்த்தருளே. 37

கர்ப்பூரவீடிகை

**து**ய்யகர்ப் பூரந்தக் கோல மிலவங்கச் சுண்ணமொடு
செய்யநற் குங்குமப் பூசாதிக் காயின் செழும்பொடியுங்
கொய்வரு மெல்லிலை கோலமென் பாகிவை கூட்டிவிரை
மெய்வரு வீடிகை மெல்லுதி யன்னை விளங்குறவே. 38

முகவாசம்

**வி**ளங்குறு பஞ்ச முகவாச மேன்மை மிகுந்ததன்பால்
வளங்கெழ நல்குவன் தக்கோல மேல மிலவங்கமுங்
களங்கமி லாக்கருப் பூரமென் பாகடை காணுமிவை
உளங்கொள வேற்றருள் கூருதி மூவா உலகவன்னே. 39

---

பானம் முதலியவற்றிற்காகிய நீரை நல்ல சீலையால் வடிகட்டி எடுக்க வேண்டும் என்பது சாத்திர விதியாகும். கலசம் – குடம், பாத்திரம். சீதம் – குளிர்ச்சி.

36. துறு (கனி) – நெருங்கிய, குலையாகப் பொருந்திய. துவரின் நிரைபோன்று உறு மாதுளை – பவள மாதுளை; துவர் – பவளம்.

37. வருக்கை – பலாப்பழம்; இது வரிக்கை யெனவும் வழங்கும். முத்தென வண்ணம் உறு மாதுளை – முத்து மாதுளை. வதரி – இலந்தை

38. வீடிகை (வீடிகா) – வெற்றிலைச் சுருள், வாசனைத்திரவியங்களோடுகூடிய வெற்றிலை மடிப்பு. அம்பாளுடைய வாயிலிருக்கும் வீடிகை. ரசம் (தம்பலம்) மகிமைபொருந்தியது, நவரசாலங்கார கவித்துவசத்தியை யளிப்பது எனவும் கம்பர் காளிதாசர் முதலிய மகாகவிகள் அவ்வாறு அம்பாளுடைய அருளைப் பெற்றவர்களே எனவும் பெரியோர்கூறுவர். இதனை,

"கவித்வ பரிபாடீம் அகாதிபசுதா........ உதாரமுக வீடீரசேன தனுதாம்", என ஆசாரியசுவாமிகள் அம்பாஷ்டகத்தில் வியந்து கூறியிருத்தல் காண்க.

39. முகவாசம் – வாசனைக்காக வாயில் இட்டுக்கொள்ளுதற்குரிய தக்கோலம் முதலிய ஐவகை வாசனைச் சரக்குகள்.

### தாம்பூலம்

உலவ வுருக்கிய வொண்பொ னிறத்தி னுயர்வெள்ளிலை
குலவு தமனியங் கூட்டிய பாகு குளிர்நன்முத்தின்
நிலவுவெண் சுண்ணத் தொடுகாசும் நேர்ந்து நிறைபொற்றட்டிற்
கலவுறு தாம்பூலங் கொள்ளுதி வாய்க்கம லத்தினிதே. 40

### ஆலாத்தி

இனிய துடியுரு விற்கோ துமைமயி லியற்றுபுத
மனிய கலத்தினில் வைத்தநன் கான்றபல் மாவகலில்
தனிய நறுநெய் ததைவித்து நூற்றிரி சார்த்தியன்பு
கனிய நினக்கன்னை காட்டுவ னாரதி காண்நிதமே. 41

### தீபாராதனம்

நிதமுழங் கால்கள் நிலத்துற நாட்டி நிறையன்பொடு
விதமுறு தீப மிளிர்கல முச்சியின் மீதுகொண்டே
யிதமுற நின்ற னெதிரின்முக் காற்சுற்று மென்வயினுன்
ததமுறு கண்ணின் கடைநோக்கு தண்ணளி தங்குகவே. 42

### தட்சிணை

தங்கு கருணைசெய் தாயே மணியுந் தரளமுமுத்
துங்க முறும்வகை தூவிநின் மேனியிற் றுன்னுசகம்
எங்கும் புகழு மெழிற்றுகில் சாத்தி யினமணியும்
பொங்கு பசும்பொனு மீகுவன் தக்கிணை யாப்புரிந்தே. 43

### குடை

புரிதரு கால்பொன்னி னுயது சோதி பொலிமதியின்
விரிதரு வட்ட மனையது பொன்முடி மேயதுசீர்
தெரிதரு முத்தின் தெரியல் புடையிற் சிவணியது
பரிதரு தெய்விக மாங்குடை யீது பரிப்பனிற்கே. 44

---

40. உலவ உருக்கிய – ஓடவைத்த. தமனியம் – பொன். காசு – காசுக்கட்டி. கலவுறு – கலந்த. வாய்க் கமலம் – வாயாகிய தாமரைமலர்

41. துடி – உடுக்கு; துடியுருவில் – உடுக்கினது உருவமாக. இயற்றுபு – இயற்றி, செய்து. மா அகல் – மாவினாலாகிய தகழி. ஆரதி – ஆலாத்தி. தமனிய கலம் என்பது செய்யுள் விகாரம்.

42. ததம்உறு – விசாலித்த, நீண்ட. தண்ணளி – அருள்.

43. தரளம் – முத்து. உத்துங்கம் – உயர்ச்சி, சிறப்பு. தக்கிணை - தட்சிணை, காணிக்கை. புரிந்து - விரும்பி.

44. தெரியல் - மாலை. சிவணுதல் - பொருந்துதல். பரிதரு - களிப்புறச்செய்யும். தெய்விகம் - தெய்வத் தச்சனாற் செய்யப்பட்ட.

சாமரை

**ப**ரிக்கும் பொலன்பிடி பன்மணி முத்தம் பதித்ததுகா
ரிரிக்கும் சரற்பரு வத்தெழு மாமதி யேய்ப்பவொளி
விரிக்கும் கவரி விசித்திர மாமிது வீசுவன்பார்
தரிக்கும் உயிர்க்கொரு தாயே பெருமகிழ் சாலநிற்கே. 45

கண்ணாடி

**சா**ல விளங்கு தபனன்றன் மண்டிலத் தன்மையுற்றுக்
கோல மணிகள் குயின்றகண் ணாடியிற் கூறுசரற்
கால மதியிற் கவினார் முகச்செவ்வி கண்டருளாய்
வேல தனைய மதர்விழி யாயன்னை வேண்டுவனே. 46

அடுக்குத்தீபம்

**வே**ண்டி வணங்கிந்தி ராதியர் மோலி விளக்கமன்னே
மாண்டகு நின்னடி வைக்குநற் பீடம் வயங்கச்செயும்
ஈண்டிய வாயிர மேற்று சுடர்விளக் கம்மெடுப்பன்
பூண்டதொ ரன்பில்நின் பொன்மேனி யெங்கும் பொருந்துறவே.

குதிரை

**உ**றுதரு மோகை தருகதி வாய்ந்த துயர்ந்துமணி
செறிதரு பல்லணஞ் சேர்ந்தது பொன்னணித் தேசினதா
யறைதரு தீங்குர லார்ந்து புடையசு வம்பலசூழ்
இறைதரு வேகப் பரியிது தேவி யிவர்தரற்கே. 48

யானை

**த**ரத்திற் சிறந்தது தண்முகி லொப்பது சார்ந்தளிசூழ்
சிரத்திற் றடவுசிந் தூரத்த தான்ற செவியிணைசா
மரத்திற் பொலிவது மாழை யியன்ற மணிக்கழுத்த
துரத்திற் பெருமத்த மாதங்க மீதன்னை யூர்ந்தருளே. 49

---

45. கார் இரிக்கும் - முகில்களைச் கலையச்செய்யும். எய்ப்ப - நிகர்க்க, போல. சால - நிறைய.

46. தபனன் - சூரியன். மண்டிலம் - வட்டம், பிம்பம். குயின்ற - பதித்த. மதியில் - மதிபோல; மதி - சந்திரன்.

48. ஓகை - பிரியம், மகிழ்ச்சி. பல்லணம் - சேணம். பொன் அணி - பொன் ஆபரணம்; அதனாற் சிறப்புற்று விளங்குவது. இறை தரு - தலைமைவாய்ந்த.

49. தரம் - தகுதி, சாதி. மாழை - பொன். மணி - கழுத்திற் கட்டும் மணி, சாமரத்தில் - சாமரைகளால். மாதங்கம் - யானை.

தேர்

ஊர்தரற் கான வுயர்தே ரிதுபொன்னி னோங்கியது
சீர்தரு வேகப் பரிபூட் டியது திகழ்ந்துமணி
யார்தரு மாழி யவைநான் கமைந்தணி மேற்கட்டியுஞ்
சேர்தரு நீரது தேவிநிற் காக்கினன் சிந்தையினே. 50

சாதுரங்க சைன்யம்

சிந்திப் பவர்க்கருள் தேவி பகவதி சேர்த்துவன்மா
தந்தி நிரைப்பரி சந்தனங் காலாட் சதுரங்கமாம்
முந்து திசையெங்கு முட்டு முருமி னொலிமுரசப்
பந்தி கெழுமுப தாகினி யீது பரிவுகொண்டே. 51

கோட்டை

பரிக்கும் எழுகட லாமகழ் சூழ்ந்தது பல்பொருளுந்
தரிக்கும் வளத்தவி சால மடுத்தது தாங்குமரண்
விரிக்கும் தகையவிம் மேதினி யாம்வியன் கோட்டையருள்
தெரிக்கும் திரிபுரை சேர்த்துவ னிற்குயர் சீர்பெறவே. 52

விசிறி

சீராருந் தாமரைச் சீதள பத்திரஞ் சேர்ந்ததுபொன்
நீராருந் தாதுட னீடு சுகந்த நிறைந்துவரிக்
காராரும் வண்டினங் காமரம் பாடுங் கவின்விசிறி
யேராரு மேனிக் கிதமுற வீசுவ னீங்களையே. 53

---

50. மணி ஆர்தரும் ஆழி - இரத்தினங்கள் பதித்துவிளங்கும் சில்லு.

51. மா தந்தி - பெரிய யானை. சந்தனம் - தேர்; ச்யந்தனம் என்னும் வடசொல் தமிழில் சந்தனமென்றாயிற்று. சதுரங்கம் - நாலு உறுப்பு (வகை). முட்டுதல் - சென்று அடைதல். உரும் - இடி (முழக்கம்). பதாகினி - சேனை. பரிவு - அன்பு. சதுரங்கமாம் பதாகினி யென்க.

52. பரிக்கும் - சூழும். மேதினி - பூமி. வியன் - விசாலமான. அருள்தெரிக்கும் - அருள் கொழிக்கும், வழங்கும் என்றபடி.

53. சீதள பத்திரம் - குளிர்ச்சியான இதழ். பொன் நீர் ஆரும் - பொன்னிறமான. தாது - பூந்தாது, மகரந்தப்பொடி. காமரம் - இசை, கீதம்.

### நடனம்

**ஈ**ங்கு நடம்பயி லேந்திழை கூத்திய லிற்சுழன்று
தாங்கு குழற்பரஞ் சாய்ந்தசை யத்தரை தன்னில்விரை
ஓங்கு தொடைய லுறுமலர் சிந்த வுஞற்றுநடம்
வீங்கு மகிழ்வு விளைக்கஅன் னேநின் வியனகத்தே. 54

### கன்னியர் நடனம்

**வி**யத்தகு தாமரை நேர்முக மீது விழுந்தசைந்து
நயத்தகு வண்டி னிரையினை வென்ற நறுங்குழலார்
உயத்தகு மின்ப நடம்பயில் கன்னிய ருன்றன்முனஞ்
செயத்தகு நாட்டியச் சீரினை நோக்குதி தேவிநன்றே. 55

### தாசியர் நடனம்

**தே**வி திருமுனஞ் செய்வார் நடனந் திகழுமைம்பால்
பூவி லுழலு மளிநிரை மானவம் போருகநேர்
மேவிப் பொலிமுகச் செவ்வியி னுடைப்பில் வேடத்தினர்
கூவி னிசைய குயின்மொழித் தாசியர் கோதறவே. 56

### பல்லியம்

**கோ**தறு தக்கை குடமுழ வேய்ங்குழல் கோடுதுடி
தீதறு சல்லரி தித்திமிர் தங்கம் திரிக்டெனப்
பேசறு தண்ணுமை பேரி கலின்னெனப் பேர்சதங்கை
ஓதறு பல்லியத் தாலு னுளங்களி யோங்குகவே. 57

---

54. கூத்து இயல் - நாட்டிய இலக்கணம். தொடையல் - மாலை. உஞற்றுதல் - செய்தல். எந்திழை சுழன்று உஞற்றும் நடம் நின் அகத்து மகிழ்வு விளைக்க எனக் கூட்டிப் பொருள் கொள்க.

55. விழுந்தசைந்து வென்ற நறுங்குழல் என்க. முகமீது விழுந்து அசைகின்ற பின்னிவிட்ட கரிய கூந்தல் தாமரை மலர்மீது விழுந்து சுழலுகின்ற வண்டுகளின் நிரையிலும்பார்க்க அழகிற் சிறந்து விளங்கும் என்பது கருத்து.

56. குயில் மொழித் தாசியர் (நின்) முனம் நடனம் செய்வார் எனக் கூட்டுக.

ஐம்பால் - கூந்தல்; இங்கு, பின்னிவிட்ட கூந்தலைக் குறிப்பது. அம்போருகம் - தாமரை. நேர் - சமானம், ஒப்பு. செவ்வி - அழகு. வேடம் - (நடனத்துக்கேற்ற) வேஷம்; உடை முதலியவற்றாற் கொள்ளும் வெளித்தோற்றம். கூவு இன் இசைய குயில் எனப் பிரிக்க. இசைய - இசையையுடைய. கோது அற - தங்கள்பாலுள்ள குற்றம் நீங்கும்படி; நடனத்தைக் குற்றமில்லாமற் செய்வார் எனினுமாம்.

57. கோடு - கொம்பு வாத்தியம். துடி - உடுக்கு. தித்தி - தித்திக்கின்ற, இனிமையான; வினைத்தொகை. பேர் - பெரும், அசையும், ஒலிக்கும் என்றபடி. பல்லியம் - பலவாத்தியம்.

### வீணகானம்

ஓங்கு மெழால்செயு முத்தம வீணயி லுன்திருமுன்
பாங்கு பெறும்வகை பண்ணுவ ரேழிசைப் பாடலன்பு
தாங்கு மன்னக்கந் தருவர்தங் கன்னியர் தண்ணளியா
லீங்கு திருச்செவி யேற்றரு ளீதுனை யேத்துவனே. 58

### நிருத்த கீத வாத்தியம்

ஏத்து பரத வியல்சேரு நாட்டிய மேந்திழையார்
பூத்து மகிழ்வு பொலியநின் னுள்ளம் புரிந்தபின்பு
கூத்து வகைகளுங் கோதறு கீதமுங் கூர்ம்பல்லியச்
சாத்து நிகழ்த்துவன் தாயே நினக்கின்பு சார்தரவே. 59

### தோத்திரம்

தரங்க முடுத்த தரணியில் வானிற் சராசரமாம்
ஒருங்கெவ் வுயிர்க்கு மொருதனித் தாயென வுற்றவள்நீ
கரங்க டலைக்கொடு கட்புனல் சோரக் கலங்குமென்மே
லிரங்கல் செயாம லிருந்தனை யேலெவ ணேகுவனே. 60

ஏகினு மென்பய னீன்றவள் நீயடி யேனையுயிர்
போகினு மன்றிப் புவிவாழ்ந் திடினும் புரந்தருள்யா
ராகினு மன்னையை நீங்குவ ரோவவ ளாற்றுவளோ
பாகினு மட்டிய பாலினுந் தீவிய பான்மையளே. 61

மையார் களத்து மகேச்சுர ளுருன் மகிழ்நரவ
ரையார்நின் பாகத் தடக்கமன் றேவினை யாலலைந்து
நையா தியானுய்ய நன்கு பரிந்து நவின்றிலையேல்
வையா ரவரெனை வான்முத்தி வீட்டில் மனங்கொளன்னே. 62

---

58. எழால் - யாழின் எழும் இன்னிசை. பண்ணுதல் - இசை வாசித்தல், பாடுதல். கன்னியர் வீணையில்பாடல் பண்ணுவர் எனக்கூட்டுக

59. எந்திழையார் நின்னுள்ளம் மகிழ்வு பூத்துப் பொலிய நாட்டியம் புரிந்தபின்பு என இயைத்துப் பொருள்கொள்க. கூர்தல்- சிறத்தல், சாத்து -- கூட்டம், தொகுதி.

60. தரங்கம் - திரை; இங்கு ஆகுபெயராய், கடலை யுணர்த்திற்று. தரங்கம் உடுத்த - கடல் சூழ்ந்த. தரணி - பூமி.

61. பாகு - சர்க்கரைக்கட்டி. அட்டிய - காய்ச்சிய. தீவிய - இனிய.

62. மை ஆர் களம் - கருமைநிறம் விளங்கும் கழுத்து. மகிழ்நர் - கணவர். ஐ ஆர் - அழகு பொருந்திய. 'மகேச்சுரனுர் உன் மகிழ்நர்-

மனங்கொண்ட தெய்வமு மைந்தரு மாதரு மற்றுமுள்ள
இனங்கொண்ட சுற்றமும் யாவும் பராசத்தி நீயெனவே
தினங்கொண் டிருக்குநின் சேயேனை யென்றருள் சேரவைப்பாய்
கனங்கொண்ட கண்டக் கடவுள் கவானிற் கலிப்பவளே. 63

கதிதரு வேமெனக் கையினிற் காட்டும் கடவுளர்போல்
விதிதரு கைகள் வெளிப்படக் காட்டுதல் வேண்டுமதோ
துதிதரு வோர்க்குத் துயர்நீக்கம் வாழ்வுமுன் தூயவடி
அதிதரு மேயன்னை யன்னுரெவ் வாறிணை யாவர்நிற்கே. 64

ஆவது தேர்ந்து னடியே புகலென அன்பினிதம்
பூவது கொண்டுயர் பூசை தியானம் புகழ்ச்சரிதை
மேவது செய்யும் நியமத்தி னோர்நின் வியனருளாற்
சாவது நீங்கித் தவாநெறி சார்தல் சரதமன்னே. 65

---

அவர் நின்பாகத் தடக்கம்' என்பதனோடு "வவ்வியபாகத் திறைவரும் நீயும் மகிழ்ந்திருக்குஞ்—செவ்வியும்" என்னும் அபிராமியந்தாதிச் செய்யுளையும் ஒப்பு நோக்குக. ஆன்மாவிடத்துச் சிவசத்தி பதிதலாகிய திருவருட்பேறு கிடைத்தாலன்றி, ஆன்மாவுக்கு மல நீக்கமும் பெரு வாழ்வும் கிட்டாதாகலின், உலக வழக்கில்வைத்து, இவ்வாறு துதி செய்யப்பட்டது.

63. என்று - எற்று, தாங்கி. கனம்கொண்ட கண்டம் - மேகம் போன்ற கருமை நிறம்பொருந்திய கழுத்து; கனம் - மேகம். கடவுள் என்றது சிவபெருமானை. கவான் - தொடை. கலித்தல் - சிறந்து விளங்குதல். பராசத்தியாகிய அம்பாள் சிவனது இடது தொடையில் வீற்றிருப்பாளென, சத்தி சிவங்களது ஐக்கியத்தை, சாத்திரங்கள் கூறுவது இங்கே குறிப்பிடப்பட்டது.

64. பொதுவாக, கடவுளர் படிவங்களில் ஒருகை அபயமாகவும் ஒருகை வரதமாகவும் அமைந்திருக்கும். அதுபோலன்றி, திரிபுரசுந்தரிக்கு நான்கு திருக்கரங்களிலும் பாசம், அங்குசம், பூங்கணை, கருப்பம் வில் என்பன முறையேயிருப்பன. அபய வரத கரங்கள் இல்லை. அம்பாளுடைய திருவடியே அன்பர்களது இஷ்டகாமியங்களை அவர்கள் நினைத்ததினும் அதிகமாக வழங்கும். அபய வரத கரங்கள் அமையப் பெற்றவர்களாய் வேண்டிய வரத்தை மாத்திரம் நல்கும் ஏனைக் கடவுளர் அவ்வித கரங்களின்றி வேண்டியதினும் அதிகமாக வழங்கும் உனக்கு எவ்வாறு ஒப்பாவார் என்பது கருத்து. அதி தரும் - வேண்டியதினும் அதிகமாகத்தரும்

65. மேவது - மேவுஅது; மேவு - விருப்பம்; அது அசை. நியமம் - செய்கடன். தவா நெறி - அழியாத பதவி, முத்தி. சரதம் - உண்மை, நிச்சயம்.

சரத்துறு சந்திர னேர்நிற மும்மதி சார்முடியுங்
கரத்துறு புத்தக முஞ்செப மாலையுங் காண்டகைய
வரத்துறு கையு மபயமு மாக மனத்திலுனை
யிருத்துறு மன்பருக் கின்கலை யாதெளி தெய்தரிதே. 66

எய்தற் கரிய தெனுசெல்வந் தன்னு ளிறைமையொடு
செய்தற் கரிய செயல்யாது பாரிற் றெரிவரிய
உய்தற் குரிய வுறுகலை யாதுயர் சத்தியுனை
வைதற் கரிய மனநேயத் தோடு வணங்குநர்க்கே. 67

வணங்குகின் றேனலன் வாழ்த்துகின் றேனலன் வாய்மைமுதற்
குணங்களுள்ளேன் றேனுங் குறுகே னெனினுங் குணநிதியே
கணங்கொளு மன்பர் கணக்கி லெனையுங் கருதுகண்டா
யிணங்குறு மைவ ரியன்றதொர் மஞ்சத் திருப்பவளே. 68

---

66. சரத்(து) - சரற்காலம், கூதிர். யாது இன்கலை எளிது எய்த அரிது எனக்கூட்டிப் பொருள்கொள்க. இது மதுரகவித்துவ சத்தி பெற விரும்பும் அன்பர் செய்யும் உபாஸநாமுறையைக் கூறுவது. இதனை,

"உனதுசரற் காலமதி யனைய மெய்யும்
உடல்குழைத்த பிறைச்சடையும் கரங்கள் நான்கும்
அனவரத முறுமபய வரத ஞான
அருட்பளிங்கு வடமொடுபுத் தகமு மாக
நினைகிலர்முன் வழுத்திலர்பின் வணங்கா ரெங்ஙன்
நிறைந்தபசுந் தேனுமடு பாலுந் தூய
கனியுமென மதுரம்விளைந் தொழுகு பாடற்
கவிதைபொழி வதுகயிலைக் கடவுள் வாழ்வே."

என்னும் ஸௌந்தர்யலகரிச் செய்யுளானும் அறியலாம்.

67. வைதற்கரிய - நிந்திக்கத்தகாத, உண்மையான என்றபடி. மகா சக்தியாகிய அம்பாளை மெய்யன்போடு வணங்குபவர்க்கு எல்லாச் செல்வமும், எல்லா அதிகார பதவியும், எல்லாக் கல்வியும் எளிதில் எய்தும் என்பது கருத்து.

68. குறுகேன் - அடையாதேன், பொருந்திலேன். கணக்கு - விதம், கூட்டம். மஞ்சம் – கட்டில். ஐவரென்றது பிரம விஷ்ணு ருத்திர மகேச்சுர சதாசிவர்களை. இவருள் பிரமா, விஷ்ணு, ருத்திரன், மகேச்சுரன் என்னும் நால்வரும் நாலு கால்களாகவும், சதாசிவன் மேற் பலகையாகவும் அமைந்த கட்டிலில் (சிவகாமேச்வரனுடன்) சத்தியாகிய திரிபுரசுந்தரி வீற்றிருப்பாள் எனச் சாத்திரங்கள் கூறும். இஃது என் கூறியவாறோவெனின், சகளமாகிய பிரம விஷ்ணு உருத்திர மகேச்சுர தத்துவங்கள் சகள - நிஷ்களமாகிய சதாசிவ தத்துவத்தி லொடுங்க, அது நிஷ்களமாகிய சத்தி தத்துவத்தி லொடுங்க, சத்தியானது சிவத்தோடு அபேதமாக ஒன்றி விளங்கும் என்பது கூறியவா றென்றுணர்க.

3

இருக்கு மொழியு மெழுத்தொரு மூவைந் தியல்மனுவாம்
பெருக்கு மகிமை பிறங்குநின் சிவித்தை பேசிநிதந்
திருக்கு விலகிய சிந்தையி னீடு தியானத்துட
னிருக்கு மியல்பெனக் கீந்தருள் வாயுல கீன்றவளே. 69

ஈன்றவ ளேயுல கீரேழ் வகையையு மீன்றவண்ணம்
நோன்றவ ளேபின் நொடிப்பவ ளேநுதற் கண்ணனடச்
சான்றவ ளேயவன் சத்திய தாய்த்தண வாதவனைப்
போன்றவ ளேயெற் புரக்கும் திரிபுர சுந்தரியே. 70

சுந்தரி யம்பிகை சூலினி காளி தொழுமடியார்
பந்தம ரிப்பவள் பார்வதி வெள்ளிப் பருப்பதத்தாள்,
இந்தமர் மோலி யிறையோ னிடத்த ளிணங்கடியார்க்
கந்தமி லாவரு ளாழிய ளென்னெஞ் சகத்தவளே. 71

தவமே முயன்றுந் தகவே யொழுகியுந் தாரணியிற்
பவமே யெடுத்துப் பயின்றதொல் புண்ணியத் தின்பயனுஞ்
சிவமே யுதவு திரிபுரை யேநின் திருவடிக்கண்
துவமே யதிபத்தி தோன்றுதல் யார்க்குந் துணிபிதுவே. 72

---

69. இருக்கு - வேதம். மனு - மந்திரம். 15 எழுத்துக்கள் கொண்ட மந்திரம் தேவிக்குரியது. அது ஸ்ரீ பஞ்சதசாக்ஷரீ எனப்படும். அதுவே சிறீவித்தை எனவும் சிவித்தை எனவும் சொல்லப்படும். தேவிக்குரிய மகா மந்திரமாகிய இந்த ஸ்ரீ வித்யா மந்திரத்தைக் குரு முகமாகப் பெற்று நாடோறும் நியமமாகச் செபம் செய்பவர் தேவியின் அருளைத் தப்பாது பெறுவர் என வேதம் கூறும். ஸ்ரீ வித்யா என்பது அம்பாளுக்கும் அம்பாளுடைய மந்திரத்திற்கும் பெயராக வழங்கும் திருநாமம் என்றறிக. திருக்கு - வஞ்சனை, மாறுபாடு.

70. நோன்றவள் - காப்பவள்; நோன்றல் - காத்தல், நிலைபெறுத்துதல். நொடிப்பவள் - அழிப்பவள். நுதல் - நெற்றி. நுதற் கண்ணன் நடம் சான்று அவள் - சிவனது நடனத்துக்குச் சாக்ஷியாக இருப்பவள். தணவாது - (சிவத்தினின்றும்) பிரியாது. அவனைப் போன்றவள் - சிவத்துக்கு ஸமமானவள், ஒப்பானவள். புரத்தல் - காத்தல்.

71. இந்து அமர் மோலி இறையோன் இடத்தள் எனப் பிரிக்க. இந்து - சந்திரன். மோலி - முடி. இடத்தள் - இடப்பாகத்து இருப்பவள். ஆழி - கடல்.

72. திரிபுரையே! நின் திருவடிக்கண் அதிபத்தி யார்க்குந் தோன்றுதல் (அவர்) பயின்ற தொல் புண்ணியத்தின் பயனும் என இயைத்துப் பொருள் கொள்க. துவம் எய் அதிபத்தி - நிலையான மிகுந்த பத்தி; திடபத்தி.

“ஸ்ரீ வித்யா மந்திர செபமும் ஸ்ரீ சக்ரத்தின் பூஜையும், லலிதா ஸகஸ்ர (ஆயிர) நாம பாராயணமும் அல்ப சொல்பமான தபசின்



ஸ்ரீ சக்ரம்.

விந்து திரிகோண மெண்கோணம் வேறிரண்டாய்
வந்த தசகோண மனுகோணம்-முந்துதளம்
எட்டுமீ ரெட்டுமேல் மூவட்ட முச்சதுரம்
இட்டது ஸ்ரீசக்ரத் தியல்.



**து**ணிந்து னடிமலர்த் தொண்டே பொருளெனத் தூமதிய
மணிந்து விளங்கு னபிராம மேனியு மங்கைமலர்த்
திணிந்து மிளிரங் குசபாசம் வில்கணை சிந்தைசெய்து
பணிந்து பரவுவன் நாளுமன் னேநின் பதாம்புயமே. 73

**ப**தமெடுத் தாடும் பரம னிடத்திற் பவுரிகொண்டே
யிதமொடு தாளமிட் டாடும் பராசத்தி யீறில்மறை
நிதமெடுத் தேத்து நிகரில் பழம்பொருள் நீடுமலக்
கதங்கெடுத் தாளுங் கருணை நிதியெனைக் காப்பவளே. 74

**கா**ப்புறு நாற்பத்து முக்கோண நாயகி காமனுயிர்
கோப்புறு மாறு குளிர்செய்சஞ் சீவி குலவுமுடல்
யாப்புறு மூல முதலாறு சக்கிர மேறியப்பால்
வாய்ப்புறு நேய மணாள னிடத்தில் வதிபவளே. 75

---

பலன் அல்ல; அதாவது அவை மூன்றும் அளவற்ற த்வத்தினால் ஏற்படக் கூடியவையே தவிர, சாமானியமான தபசினாற் கிடைக்கமாட்டா'' என்பது தாற்பரியம்; இது பிரமாண்டபுராண வசனம்.

73. உன் அடிமலர்த் தொண்டே பொருளெனத் துணிந்து என இயைத்துப் பொருள் கொள்க. அபிராமம் - அழகு. பதாம்புயம் (பத அம்புயம்) - பாத தாமரை.

74. பரமன் இடத்தில் - பரமனது இடப்பாகத்தில். பவுரி - கூத்து, வட்டமாக ஆடுதல். பரமசிவன் மகா தாண்டவம் செய்யும் போது அம்பாளும் நடனம் செய்கிறாள் என்றும், சிவ தாண்டவத்திற்குச் சாக்ஷியாக இருக்கிறாள் என்றும் ஆகம சாத்திரங் கூறும். இதனை

"நேர்ந்து மூலவா தாரத்தி லானந்த
நிர்த்தமிடும் இறைவி, நின்னோ(டு)
ஆனந்த தாண்டவம் விளைத்தாக வடிவுபெறும்
ஆதிசிவ னைப்பரவு வாம்." (ஸௌந்தரிய லகரி)

எனவும்,

"இடமதனிற்—சந்தத் தனத்தா ளுமைகாணத் தலைவன்
திருத்தாண் டவம் புரியும்." (திருவாத—புராணம்)

எனவும் வருமவற்றாலும் அறியலாம். கதம் - கோபம், வலிமை. இங்கு,

"திரோதான சத்தி — அது பரிந்து—நாகமா நதிமதியம் பொதிசடையா னடிகள்
நணுகும்வகை கருணைமிக நயக்குந் தானே." (சிவப்பிர)

என்பதனையும் நோக்குக.

75. காப்பு உறு - காவல் பொருந்திய; அதி இரகசியமான. நாற்பத்து முக்கோணம் - 43 கோணம் பொருந்திய சக்கிரம். இதுவே சிறீசக்கிரம் என்பது. இந்த ஸ்ரீ சக்ரத்தில் அம்பாளைப் பூசித்து வழிபடுதல் தேவி உபாசனையில் முக்கியமான ஓரங்கம். இதனால் ஆன்ம

வதிந்தரு ளென்மன மாமணி வீட்டில் மகேசனிடம்
சுதந்திர மாவுறை சுந்தரி யேவெஞ் சுடர்நடுவும்
முதந்தரு சீத முழுமதி யின்னடு வேதமுடி
யிதந்தரு மன்ப ரிதயமு மேவி யிருப்பவளே. 76

பவ்ள நிறத்தி பராசத்தி நீலி படர்பசுமை
திவளு நிறத்தி செழும்பொ னிறத்தி சிறந்திலகு
தவள நிறத்தி சயந்தரு காளி சனுதனத்தி
குவளை நிறத்திற் குலவுமுக் கண்ணி குலதெய்வமே. 77

---

ஞானம் உண்டாகும் என நூல்கள் கூறும். ஸ்ரீ சக்ரத்தின் அமைப்பு வருமாறு:— விந்துவும், முக்கோணமும், அதற்குமேல் எண்கோணமும், அதற்குமேல் பதின் கோணமும், அதற்குமேல் மற்றொரு பதின் கோணமும், அதற்குமேல் பதினான்கு கோணமும் (ஆக நாற்பத்து முக்கோணமாம்), அதற்குமேல் வட்டமும் எட்டிதழ்க் கமலமும், அதற்குமேல் பதினறிதழ்க் கமலமும், அதற்குமேல் மூன்று வட்டமும், அதற்குமேல் மூன்று சதுரமுமாக அமைந்தது ஸ்ரீ மகா திரிபுரசுந்தரிக்குரிய ஸ்ரீ சக்ரம். விந்து சிவன் வடிவும், முக்கோணம் சத்தி வடிவும் ஆகும். இதன் விரிவெல்லாம் ஸௌந்தரிய லகரி முதலிய நூல்களிற் காண்க.

காமனுயிர் கோப்புறுமாறு குளிர்செய் சஞ்சீவி - பரமசிவனது நெற்றிக்கண்ணின் அக்கினியாற் சாம்பராகிய மன்மதனது உயிர் மீளவும் வந்து பொருந்தும்படி பிழைப்பித்த சஞ்சீவி போன்றவள். சஞ்சீவி என்பது இறந்தவர்களைப் பிழைப்பிக்கும் சத்தி பொருந்திய ஒரு மூலி மருந்து.

உடல் யாப்பு உறு - சரீரத்தில் அமைந்திருக்கின்ற. மூலம் முதல் ஆறு சக்கிரம் - மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனுகதம், விசுத்தி, ஆஞ்ஞை என்னும் ஆறு ஆதார சக்கிரங்கள். இவைகளுக்கு மேலாக இருப்பது ஆயிர இதழ்க் கமலம். தேவி இந்த ஆறு சக்ரங்களையுங் கடந்து அப்பால் ஆயிர விதழ்க் கமலத்தின் நடுவில் சிவனோடு சேர்ந்து ஆனந்தமயமாக விளங்குவள் என்பதாம். இதனை,

"மேலனுகிக் குளபதத்தைப் பின்னிட் டப்பால்
மென்கமலத் தாயிரந்தோட் டருண பீடத்(து)
ஆலவிடம் பருகியதன் மகிழ்ந ரோடும்
ஆனந்த முறும்பொருளை யறிய லாமே.''

என ஸௌந்தரிய லகரியிற் கூறியிருத்தல் காண்க. இதில் குளபதம் என்பது ஆறுதாரங்களை.

76. வெஞ்சுடர் - சூரியன். முதம் - மகிழ்ச்சி. வேதமுடி - வேதத்தினுச்சி, உபநிடதம். மேவி - விரும்பி.

77. பராசக்தியாகிய தேவி உண்மையில் நாமரூபங்களற்ற பரப்பொருளாயினும் தீயவர்களை ஒறுத்து நல்லவர்களைக் காத்து உலகை

குலந்தரும் நல்லவர் கூட்டந் தருமுடல் நோய்குறுகா
நலந்தரும் பல்கலை ஞானந் தருமிந்த ஞாலம்புகழ்
வலந்தரும் செல்வ வளந்தரும் நன்மனை வாழ்வுதருங்
கலங்தொரு முச்சக மாட்டும் பராசத்தி கண்ணருளே. 78

கண்ணிய பூரணை கானு மிரவிற் கலைமண்டில
நண்ணிய மத்தியில் நின்னை நினைந்து நயப்புடனே
பண்ணிய பூசைப்பின் ஆயிர நாமம் படிக்குமன்பர்
எண்ணிய நூறு வயது மிருப்ப ரிதுதிடமே. 79

---

ஸம்ரட்சித்தற் பொருட்டுப் பலவிதமான ரூபங்களை அவ்வப்போது தாங்கி வெளிப்பட்டுத் திருவிளையாடல் புரிகிறாள் என்பது கருத்து.

"சத்திதான் பலவோ என்னில், தானொன்றே, அரனுடையதாகி, காரியத்தால் அநேகமாக வைத்திடும்."

எனச் சிவஞானசித்தியாரிற் கூறியிருப்பதும் இங்கு நோக்கத்தக்கது.

பவளநிறத்தி - பாலாம்பிகை, லக்ஷ்மி முதலோர். நீலி - உமை, தாக்ஷாயணி. பசுமைநிறத்தி - ச்யாமளா, மாதங்கி. பொன் நிறத்தி - லளிதை, திரிபுரசுந்தரி. தவளநிறத்தி - கவுரி, பார்வதி, சரஸ்வதி; என்றிப்படிக் கொள்ளலாம். சனாதனத்தி - அநாதியாக வுள்ளவள். குலதெய்வம் — ஒரு குலத்தார் பரம்பரையாக வழிபட்டுவரும் தெய்வம். தேவியை வெளியுருவத்திற் பூசிப்பவர்களுக்கு 'குலம்' என்று பெயர். அவர்களுக்குத் தெய்வமாயிருப்பவள் என்றும் பொருள் கொள்ளலாம்.

78. வலம் - வலிமை, வெற்றி - ஆணை.

79. கண்ணிய - எண்ணிய, பொருந்திய. கலைமண்டிலம் - சந்திர விம்பம். நயப்பு - அன்பு. ஆயிர நாமம் - லலிதா மகா திரிபுரசுந்தரிக்குரிய ஆயிரம் (ஸகஸ்ர) நாமத் தோத்திரம். எண்ணிய - (வேதத்தில்) விதித்த. இது திடம் - இது நிச்சயம்; இதிற் சந்தேகமில்லை யென்பதாம். இது நீண்ட ஆயுளைப் பெறவிரும்பும் அன்பர் செய்யும் வழிபாட்டு முறையாகிய ஒரு பிரயோகம். இதற்கு ஆய்ஷ்கரம் என்று பெயர். "மனிதர்க்கு வயது நூறல்ல தில்லை" என்பதை "சதமானம் பவதி சதாயு: புருஷ: சதேந்த்ரிய:" என வேதம் விதித்துள்ளது.

"பூரணையிலன்று இரவில் சந்திர விம்பத்து நடுவில் ஸ்ரீமத் திரிபுர சுந்தரியைத் தியானித்து பஞ்சோபசாரங்களாற் பூசித்து லலிதா திரிபுரசுந்தரியின் ஸகஸ்ர நாமத்தை கீர்த்தனம் செய்யவேண்டும். சகல ரோகங்களும் நசித்துப்போகும். நீண்ட ஆயுளும் பெறுவான். ஆயுஷ்கரம் என்று பெயருடைய இந்த ப்ரயோகமானது கல்ப சூத்திரங்களிற் சொல்லப்பட்டிருக்கிறது" என்பது பிரமாண்டபுராண வசனம்.

திடமுறு பத்தி செயுமடி யார்மனச் சிந்தனைக
ளிடமுறும் வண்ண மியற்று னருட்குணை மெண்ணரிதே!
தடமுறு சார லிமவான் தனக்குந் தபோதனத்தாற்
புடமுறு மாதங்க னுக்கும் மகவெனப் போந்தவளே. 80

வளமுறு மாற்றல் வயங்கு செயல்புரி வாஞ்சையினோ
ருளமுறு முன்னருட் சத்தியொன் றுதஃ தூக்குவரோ!
குளமுறு கண்ணுடைக் கோமானு முன்னொடு கூடிலனேல்
அளவுறு மோவவற் கேது மியற்றல் அருட்சத்தியே. 81

சத்தி கணங்கள் சகலமு மான பராசத்தியே
சித்தி யெவையுந் தெரிவிக்கும் யோக சிவசித்தியே
பத்தி பொருந்திப் பதாம்புயம் போற்றும் பழவடியார்
முத்தி பெறும்வகை மூட்டுமன் பாரமு தக்கடலே. 82

கடலே யனைய கருணைய ளேநின் கடைக்கணென்மேல்
நடலே புரிமதி நாடுற் கல்வியு நற்புகழும்
அடலே றனைய வலியுந் தனமு மதுதருமால்
விடலே யகந்தை விழைவே மிகுபத்தி வேண்டுவனே. 83

---

80. சிந்தனைகள் - மனவிருப்பங்கள். இடம் உறும் வண்ணம் - கைகூடும் வண்ணம். எண்ணரிது - எண்ண அரிது, நினைத்தற் கரியது. இமவான் - இமயமலை அரசன். புடம் உறும் - தூய்மை யுற்ற, பரிசுத்தரான. மாதங்கன் - மாதங்கமுனிவர். மகவு என - மகளாக, முறையே பார்வதியாகவும் சாமளையாகவும். போந்தவள் - அவதரித்தவள்.

81. வளம் உறும் ஆற்றல் வயங்கு செயல்புரி வாஞ்சையினோர் - மிகுந்த வீரப்பிரதாபம் பொருந்திய செயலைச்செய்ய ஆசைப்படுவோர்; அதாவது பிரபுத்வம்பெற விரும்புவோர். உளம் உறு - அவரது அறிவிற் கலந்திருக்கிற. உன் அருள் சத்தி ஒன்றுது - நினது அருளாகிய சத்தி சேராமல், நின்னருளைப் பெறுமல். அஃது ஊக்குவரோ - அச்செயலைத் தமது ஆற்றலால் மாத்திரம் செய்து முடிப்பார்களோ; முடிக்கமாட்டார்கள் என்பதாம். குளம் உறு கண்ணுடைக் கோமான் - நெற்றிக் கண்ணையுடைய சிவபெருமான்; குளம் - நெற்றி. அளவுறுமோ - முடியுமோ, அவற்கு ஏதும் இயற்றல் அளவுறுமோ எனக் கூட்டுக.

"சிவமெனும் பொருளும் ஆதிசத்தி யொடுசேரின் எத்தொழிலும் வல்லதாம்
இவள் பிரிந்திடி னியங்குதற்கும் அரிதரி தெனுமறை இசைக்குமால்."

என்னும் ஸௌந்தரிய லகரிச் செய்யுளும் இங்கு நோக்கத்தக்கது.

82. யோக சிவசித்தியே யென்பதனை சிவயோகசித்தியே யென் மாற்றி இயைத்துப் பொருள் கொள்க. மூட்டும் - செலுத்தும், தூண்டும்; துணைச்செய்யும் என்பதாம்.

83. நடல் - நாட்டுதல், பதித்தல். அகந்தையை விடலும் மிகு பத்தியை விழைவதும் ஆகிய இரண்டையுமே வேண்டுவன் என்க, விழைதல் - விரும்புதல், ஆசைப்படுதல்.

வேண்டு மடியர் விரும்பின யாவும் விளைப்பவள்நீ
யீண்டு முலகினில் யாவர்தம் மீது மிலகுமன்பு
பூண்டு நலங்கள் புரிந்துயிர் வாழும் புலமெனக்கு
வேண்டுமென் னேநின் மிகுபத்தி வேண்டும் விழைவிதுவே. 84

விழைதரு தேவரு மேவரு நின்னடி வெல்கவெல்க!
தழைதரு மன்னுயிர் தாங்கு பராபரை யேசரணம்!
குழைதரு கொண்க னுடலிற் குறிசெயுங் கோதைநம!
மழைதரு வார்குழன் மாதங்கி போற்றி! வழுத்துவனே. 85

---

84. வேண்டும் - பிரார்த்திக்கின்ற. விளைப்பவள் - பலிக்கச் செய்பவள்- புலம் - அறிவு. விழைவு - விருப்பம், ஆசை.

85. மேவரும் - மேவ அரும், மேவுதற்கு அரிய, அடைதற்கரிய. வெல்க - சிறந்து விளங்குக. குழைதரு - குழைந்த, அன்பினால் இளகிய. கொண்கன் - கணவன். குறி செய்யும் - தழும்பு உண்டாகச்செய்த. கோதை - கோதையே (காமாட்சியம்மையே). மழை தரு - மேகம் போன்ற கரிய. மழை - மேகம். வார் - நீண்ட. மாதங்கி - மதங்க முனி புத்திரியானவளே. காஞ்சிபுரத்தில் அம்பிகை தவமிருந்து சிவலிங்க பூசை செய்யும்போது கம்பையாறு பெருகிச் சிவலிங்கத்தை யழிக்க வருதலைக் கண்டு அதனைக் காப்பாற்றுதலே கருத்தாகி யெழுந்து அதனைத் தழுவிக்கொண்டார். அம்மையாருடைய அன்பைக் கண்டு அப்பனது சிவலிங்கத் திருமேனி குழைய அதன்கண் அம்மையுடைய முலையடையாளமும் வளையலின் அடையாளமும் பதியப்பெற்றன என்பது புராண வரலாறு. இதனை,

"பணிமுலைக் குவட்டி னோடு வளைக்கையால் நெருங்கிப் புல்லித்
தணிவருங் காதல் விம்மக் காதலி தழுவ லோடும்
திணியிரு ளறுக்குஞ் சோதித் திருவுருக் குழைந்து காட்டி
யணிவளைத் தழும்பி னோடு முலைத்தழும் பணிந்தா ரையர்."

எனக் காஞ்சிப்புராணமும்,

"மலைக்கு லக்கொடி பரிவுறு பயத்தான்
மாவின் மேவிய தேவர்நா யகரை
முலைக்கு வட்டொடு வளைக்கையா னெருக்கி
முறுகு காதலா லிறுகிடத் தழுவச்
சிலைத்த னித்திரு நுதறிரு முலைக்குஞ்
செந்த ளிர்க்கரங் களுக்குமெத் தெனவே
கொலைக்க ளிற்றுரி புனைந்ததம் மேனி
குழைந்து காட்டினர் விளைந்தகொள் கையினர்."

"மாது மெய்ப்பயன் கொடுப்பவே கொண்டு
வளைத் தழும்புடன் முலைச்சுவ டணிந்தார்."

எனப் பெரியபுராணமும் மிக அழகாகக் கூறியிருத்தல் காண்க.

வழுத்தின னன்பினில் வந்த மனத்தில் மகேசியுனை
விழுத்தகு நின்குண மேன்மையை யோர்ந்து விளம்புமது
முழுத்தகு நான்கு முகன்முத லோர்க்கும் முடிவதன்றேற்
புழுத்தலை யொன்றுடைப் புன்மையி னேனெங்ஙன் போற்றுவனே.

பிரதக்ஷிணம்

போற்றிசெய் துன்னை வலங்கொடு சூழ்வரு புண்ணியர்மு
னாற்றிய பாப மகற்றி யவர்செ லடிகள்தம்மில்
சாற்றிய வோரொன்றுக் கோரய மேதந் தருபலனை
யேற்றியல் சார்பிர தட்சிணஞ் செய்வ னினிதுனையே. 87

நமஸ்காரம்

இனிதவிழ் செங்கழு நீருக்கு மீர விளந்தளிர்க்குந்
துனிதரு செய்யநற் சோதி பொலிந்து த்வசமுடன்
புனிதமு றங்குச ரேகைகள் பூண்டுபுத் தேளிர்சென்னி
குனிதரு சேவடி கும்பிடு வேன்கும ரேசனன்னே. 88

புஷ்பாஞ்சலி

அன்னையுன் பாதத் தருச்சனை யாற்றியம் போருகத்தாற்
பொன்னியல் பங்கயத் தாமம் புனைந்து பொலன்கழுத்தில்
மின்னியல் பன்மணி மேயபுட் பாஞ்சலி மேதகுநின்
சென்னியின் மீதுறச் சேர்த்துவன் சிந்தை திகழ்தரவே. 89

---

86. மகேசி! அன்பினில் மனத்தில் வந்த (வற்றால்) உனை வழுத்தினன் என இயைக்க.

87. அயமேதம் - அசுவமேதம் என்னும் யாகம். ஏற்று இயல்சார் பிரதட்சிணம் - ஏறச்செய்யும் (=கொடுக்கும்) தன்மைபொருந்திய பிரதட்சிணம். பிரதட்சிணம் - வலம்வருதல்.

88. இனிது அவிழ் - நன்கு விரிந்த (மலர்ந்த). துனி - துன்பம்; துனிதரு செய்யசோதி என்பது செங்கழுநீரும் சிவந்ததளிரும் தாம் சமானமாகையால் நாணித் துன்பமுறும்படி செய்கின்ற சிறந்த செவ்வொளி என்பதாம்; அவற்றை விஞ்சிய செம்மை நிறம் என்பது தாற்பரியம். த்வசம் - கொடி. தேவியின் பாதத்தில் (உள்ளடியில்) கொடி, அங்குசம் முதலியவற்றின் வடிவம் பொருந்திய இரேகைகள் அமைந்து அவளது ஐசுவரியத்தைக் குறிப்பனவாம். புத்தேளிர் - தேவர். சென்னிகுனிதரு - தலையைத்தாழ்த்தி வணங்குகின்ற.

89. அம்போருகத்தால் அருச்சனையாற்றி, கழுத்தில் பங்கயத் தாமம் புனைந்து, சென்னியின்மீதுறப் புட்பாஞ்சலி சேர்த்துவன் என முடிக்க. புட்பாஞ்சலி - கை நிறையக்கொண்ட பூவை இட்டு வழிபடல்.

பள்ளியறை

திகழ்தரு பன்மணி சேர்ந்தியல் மஞ்சச் சிறப்பினது
புகழ்தரு பொன்னின் விதானம் புனைந்து பொலிந்தகிலால்
நிகழ்தரு தூப நிலவி நறுமண நீடியவிம்
மகிழ்தரு மாளிகை நீவாசம் செய்ய வகுத்ததுவே. 90

சயனரோகணம்

வகுத்த கனக மணிப்படி மீது வளங்கெழுமுச்
சகத்து வுயிர்த்தொகை தாங்கு துணைப்பதம் சார்த்திமென்மை
மிகுத்த கலிங்கம் விரித்தபொன் மஞ்சத்து மெல்லணையில்
உகத்த லுறமனம் வீற்றிருப் பாயொப்பி லுத்தமியே. 91

திருவடிக்குச் செம்பஞ் சூட்டல்

உத்தம மாம்பத்ம ராகத்தை விஞ்சி யொளிசிறந்தே
நித்தம தாம்பத்ம ரேகை சுமந்தநின் தூவடிக்கி
ரத்தம தாஞ்செய்ய பஞ்சிநன் கூட்டுவ னீச்சுரனார்
சித்தம னோகரி செம்மையை மீளவும் செம்மைசெய்தே. 92

தம்பலக்களாசி

செம்மை தருந்தம் பலத்தாற் சிவந்து திகழ்ந்துவெட்டி
வெம்மை தருநறு வேரின் மிகுமண மேவுமிழ்நீர்
இம்மையொ டம்மையி னின்ப மியாவுநன் கீந்தருளும்
அம்மை யுமிழ்தாற் காம்பொற் களாசியிஃ தாகுகவே. 93

---

90. இயல் - இயன்ற, செய்த. மஞ்சம் - கட்டில். விதானம் - மேற்கட்டி.

92. பத்மராகம் - பதுமராகம்; மாணிக்க, மணியில் ஒருவகை. பத்மரேகை - பதுமரேகை; தாமரைப்பூ வடிவமான இரேகை. அதிட்டத்தைக் குறிப்பதாகிய இவ்விரேகை மக்கள் கையில் இருப்பது. அது தேவியது பாதத்தில் அமைந்துள்ளது. தூ - பரிசுத்தமான. தூ அடிக்கு இரத்தம் ஆம் செய்ய பஞ்சி நன்கு ஊட்டுவன் என்ப பிரிக்க. இரத்தம் - சிவப்பு. சித்தமனோகரி - மனதுக்கு உவப்பானவள்.

93. வெம்மை - விருப்பம். அம்மை உமிழ்நீர் உமிழ்தரற்கு ஆம் பொற்களாசி இஃது ஆகுக எனக்கூட்டி முடிக்க. களாசி - காளாஞ்சி, தம்பலம் துப்புதற்காகிய கலசம்.

பள்ளிகொள்ளுதல்

ஆகுமிம் மஞ்சத்து மெல்லணை மீதோர் கணமளவ
போகுமிக் காலம் புராரிதன் னோடு பொருந்ியன்பின்
ஓகை மிகுந்த வுளத்தொடு கண்வள ராயுயிர்க்குப்
போகமி சைக்கும் புவனேசி யென்னையும் புந்திவைத்தே. 94

தேவி சொரூபத்தியானம்

புந்தி யிருத்திவெண் முத்த மதிமுல்லை போனிறமும்
நந்து பிறையணி யும்மணித் தோடும் நலாசுகமா
வந்த மலரக்க மாலை யபய வரதமும்பொ
திந்த திருக்கர நான்குடன் முந்நேத் திரங்களுமே. 95

திரமுறு மாமணி சேர்ந்தொளிர் மோலியுந் தேவர்முடித்
தாமுறு பன்மணி தைவரு பொன்னா சனத்திருப்பும்
வாமுறு பல்கல னும்மகிழ் பூத்து மலர்முகமும்
சிரமுறு மிவ்வுருத் தேவியன் போடு தியானிப்பனே. 96

பிரார்த்தனை

யான்செய் அருச்சனை யீங்கிதின் னேயின்றி தேற்றுநவை
தான்செய் தனனவை யாவும் பொறுத்தருள் தண்ணளியால்
வான்செய் கருணைக் கடலே நிறைக மறைந்துகுறை
தேன்செய் சிவானந்தஞ் சேர விருத்தியென் சிந்தையுள்ளே. 97

---

94. புராரி - பரமசிவன். இசைக்கும் - இசையச்செய்யும், பொருந்தச்செய்யும். புவனேசி - உலக முதல்வி. புந்தி வைத்து - திருவுள்ளத்திற் கொண்டு: அனுக்கிரக சித்தத்தோடு என்றபடி.

95—96. இரண்டு செய்யுளும் ஒரு தொடர்.

மகிழ்பூத்து மலர்(ந்த) முகமும் ஆகிய இவ் வுரு(வை)ப் புந்தி யிருத்தி அன்போடு தியானிப்பன் என முடிக்க.

நந்துதல் - வளர்தல். பிறை யணி - பிறையாகிய அணி (முடியிற் சூடும் ஆபரணம்). நல் ஆசுகம் ஆ(க) வந்த மலர் - சிறந்த பாணம் ஆகப் பொருந்திய பூ. அக்க மாலை - செப வடம். பொதிந்த - தங்கிய, பொருந்தியுள்ள. நேத்திரம் - கண்.

திரம்உறு - நிலையான. மாமணி - மாணிக்கரத்தினம். தைவரல் - தடவுதல், உரோஞ்சுதல். கலன் - அணிகலன், ஆபரணம். சிரமுறு - தலைமை பொருந்திய.

97. நவை - குற்றம். எவை நவை செய்தனன் (அவை)யாவும் தண்ணளியால் பொறுத்தருள் என இயைத்துப் பொருள் கொள்க. குறை மறைந்து நிறைக. தேன் செய் - இன்பந்தரும்.

**நூற்பயன்**

**சி**ந்தையி லாக்குமித் தேவிதன் பூசை திரிசந்தியும்
புந்தியி லன்பொடு போற்றிப் படிக்குநர் பூதலத்தில்
முந்திய மூன்று முறையினில் முற்ற முடித்துடலஞ்
சிந்திய பின்னர்ச் சிவகதி சேருவர் சித்திபெற்றே. 98

**சி**த்தி தருந்திருத் தேவியைப் பூசிக்குந் திண்மையிலார்
நித்திய மித்துதி நீடன்பி னோது நியமத்தரேற்
புத்தியி லெண்ணிய போகங்க ளார்ந்துயர் பூசனையைப்
பத்தி யொடுஞ்செய் பலனனி யெய்துவர் பாங்குறவே. 99

**பா**ங்குறு மானச பூசனை பண்ணுமிப் பாடல்பத்தி
யோங்குறு சிந்தையொ டோது மடியரொ ராண்டதனிற்
தேங்குறு வாக்கி னிறைவி பராசத்தி சீரருளால்
வாங்கூரு நற்கலை வாணரென் றேய்குவர் மங்கலமே. 100

**தேவி மானச பூசை அந்தாதி**
**முற்றிற்று.**

---

98. பூசை என்பது கடைக்குறையாய் நின்று பூசை அந்தாதியைக் குறிப்பது.

திரிசந்தி - காலை உச்சி மாலை யென்னும் முப்போதும். முந்திய மூன்று - அறம் பொருள் இன்பம் என்பன.

99. போகங்கள் ஆர்ந்து - போகங்களை யனுபவித்து. பலன் நனி எய்துவர் என்க. பாங்கு உற - தகுதி பொருந்த.

100. பாங்கு - நன்மை, அழகு. தேங்குறு - நிறைந்த, சமஸ்தமான. வாக்கின் இறைவி - வாக்குகளுக்கெல்லாம் தலைவி. உலகம் சத்தப் பிரபஞ்சம் அர்த்தப் பிரபஞ்சம் என இரு பிரிவுகொண்டது. சத்தம் என்பது வாக்கு. சத்தப்பிரபஞ்சம் சத்திமயமானது; அர்த்தப் பிரபஞ்சம் சிவமயமானது. அதனால் பராசத்தியாகிய அம்பாளுக்கு வாக்வாதினீ (=வாக்கைச் சொல்பவள், சொல்லும்படி செய்பவள்) எனவும், வாக் அதீச்வரி (= வாக்குகளுக்கெல்லாம் தலைவியாயிருப்பவள்) எனவும், வாகீச்வரீ (= வாக்குக்குத் தலைவி) எனவும் நாமங்கள் வழங்கும்.

"**அவனரு ளாலே அவன்றாள் வணங்கி**" என்றபடி,

"வாக்குகளுக்கெல்லாம் பிறப்பிடமாயிருக்கிற ஓ தாயே! உம்முடையவாகிய வாக்குகளாலே உம்மை யான் இப்படித் துதிசெய்தது" என **ஸ்ரீ** சங்கராசாரியசுவாமிகளும் அருளிச் செய்திருப்பதை யுற்று நோக்கினல், சிவசத்தியாகிய அம்பிகையின் திருவருளாலேதான் ஒருவர்க்கு

"**நூக்கும் பனுவற் றுறைதோய்ந்த** கல்வியுஞ் சொற்சுவைசேர் வாக்கும்"

சித்திக்கும் என்பது சித்தம்.

# செய்யுண் முதற்குறிப்பு அகராதி

[குறிப்பு :— தேவிக்குரிய ஸ்ரீ சக்ரத்தில் 43 கோணம் இருப்பதுபோல, இத் தேவி அந்தாதியிலும் செய்யுட்கு ஆதியாக 43 அக்ஷரங்கள் அமைந்திருப்பது ஒரு வியப்பாகும்.]